பருத்தி நூல்களுக்கு பிரதான ஸ்தாபனம்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிட்.

**மதுரை - தூத்துக்குடி - அம்பாசமுத்திரம்**

5,00,000 நூற்கும் கதிர்கள். நெம்பர் 80 வரை நூல்கள்.

எங்களுடைய விசேஷமான நூல்கள்: ஒத்தை நூல், இரட்டை நூல், பனியன் நெசவுக்கேற்ற கோன் நூல், மில் நெசவுக்கேற்ற சீஸ் நூல், முறுக்கேற்றிய நூல்.

நாங்கள் சப்ளை செய்வது: கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய காரிக்கன் நூல்கள், இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள், கனத்த வெப்பிங், கான்வாஸ் முதலியவைகளுக்கேற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான சன்ன நூல்கள்.

எங்கள் எகிப்திய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப் போல் எல்லா வகையிலும் கீர்த்தி பெற்றவை.

நாங்கள் நூற்பதைத் தவிர நெய்வதில்லை.

மானேஜர்கள்:

**ஏ. & எப். ஹார்வி லிமிடெட்.**




# ஜாமா ஆயில்

சகல வலிகளுக்கும் மருந்து. அந்த வலியை உடனே விரட்டுங்கள். உபாதை எந்த இடத்திலிருந்தாலும், எவ்வளவு கடுமையாகயிருந்தாலும், கவலை வேண்டாம். சில துளி **ஜாமா ஆயிலை** விட்டுத் தேய்க்கவும். இரண்டொரு நிமிஷங்களில் வலி மறைந்து உங்களுக்குப் புன்னகை தவழும் இந்த அற்புத மருந்தை வாங்கி உபயோகியுங்கள்.

## அமர்சந்த் சோபாசந்த்

**மருந்து, ரசாயன மொத்த வியாபாரிகள்**

**95, நைனியப்ப நாயக்கன் தெரு,**

**பி. டி. சென்னை.**

# "விழலுக்கு நீர் பாய்ச்சி மாயமாட்டோம்"



வளமான நிலங்களுக்குத்தான் வேண்டியமட்டும் நீர்பாய்ச்சி நாடு செழிக்க மக்கள் கொழிக்கப் பாடுபடுவோம் என்கிறார்கள் பண்ணை மக்கள். 'ஸிக்மா' பம்ப் இவ்வேலையை சுலபமாக்கி எவ்வளவு தண்ணீர் இறைக்கவேண்டுமானாலும் உதவி செய்யும்.



எந்த விதமான ஆலை, ரசாயனசாலை நீர்ப்பாசனம், வடிகால்களுக்கும் தக்க "பம்ப்" எங்களிடம் கிடைக்கும். உறுதியாக நீடித்துழைப்பவை. முழு விவரங்களுக்கு எழுதுங்கள்.



# ஸிக்மா

*விவசாய* **பம்புகள்...**

## வில்லியம் ஜாக்ஸ் & கோ, லிமிடெட்.

**37, செகண்டு லைன் பீச், சென்னை.1.** Kittu's

**டெலிபோன் : 3226 : தபால் பெட்டி 1282 : தந்தி : "LIMPET"**

ஆழம் காண முடியாத அறிவுக்கும், இணையற்ற புத்தி கூர்மைக்கும், ப்ரமிப்பு ஊட்டும் தீர்க்க தரிசனத்துக்கும் ஆதரிசம் தமிழ் நாட்டின் தவப் புதல்வர் ராஜாஜி. அஜந்தாவின் மூலம் இந்த மகா கலைஞர் விடுத்திருக்கும் செய்தியை தமிழ் மக்கள், குறிப்பாக என் சகோதர பத்திரிகாசிரியர்கள், பன்முறை படித்து நிதானமாய் சிந்தித்து அவருடைய லட்சியக் கனவுகளை நினைவாக்குவார்கள் என்று நம்புகிறேன். அணுகுண்டேனும் வலிது பிரசாரம். சமூகத்தை ஸ்வர்க்க போகத்தில் திளைக்க வைக்கவோ, நரக வேதனையில் வாட்டவோ அது ஒன்றினால்தான் முடியும். ஆனால், ராஜாஜி கூறுவதுபோல், அதை இனிமையாகவே நடத்தி, நாட்டை ஆதரிச ராஜ்யமாகத் திகழச் செய்து, ஏன் வெற்றி காண முடியாது?

மலர் என்றால் பலருடைய கட்டுரைகள் பரிமளிக்கவேண்டுமென்ற சம்பிரதாயத்துக்கு விலக்காக இந்த இதழை வெளியிட்டிருக்கிறேன். எத்தனை முறை படித்தாலும் தெவிட்டா இன்பத்தை அளிக்கும் ராஜாஜியின் சிறுகதை ரஸிகர்களை மகிழ்விக்கும் என்ற நம்பிக்கை எனக்கு. இனி அஜந்தா இதழ்கள் இதே அளவில் வெளிவரும்.

—கே. ஸ்ரீ.




குகை : 1 ஓவியம் : 5

ஜுன் 1948

பிரதி விலை அணா எட்டு.

வருஷ சந்தா ரூபா ஆறு.

நிர்வாகம் :

சிரஞ்சீவி கன்ஸர்ன்ஸ்

1-186, மௌண்ட் ரோட், சென்னை-2.


PURE ALUMINIUM
THE CROWN




GOVERNMENT HOUSE,

டார்ஜீலிங். 26-5-48

உங்கள் கடிதம்! தமிழ் மக்களுக்கு வெகு தொலையிலிருக்கும் நான் "செய்திகள்" அனுப்பி என்ன சாதிக்க முடியும்? பக்கத்திலுள்ள தலைவர்கள் என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்வார்கள். உண்மையையே பிரசாரம் செய்வதும் இனிமையாகவே அந்த பிரசாரத்தை நடத்துவதும், துவேஷத்தை வளர்க்காமலிருப்பதும் பத்திரிகையின் கடமை.

சி. ராஜகோபாலாச்சாரி

The Editor,
"AJANTA"
1/186, Mount Road
Madras - 2.

எல்லைப்புற காந்தி
அப்துல் கபார் கான்



# ஜகதீச சாஸ்திரிகள் கனவு

**ராஜாஜி**

இரங்கூன் ஜகதீச சாஸ்திரிகள் தமது ஐம்பத்திரண்டாவது வயதில் தாம் பிறந்த ஊராகிய திருவிடைமருதூருக்குத் திரும்பி வந்தார். அவர் முதலில் பாரிஸ்டர் சுப்பையரின் சமையல்காரனாக இரங்கூனுக்குப் போனார். சில காலத்துக்கெல்லாம் சமையல் வேலையை விட்டு இரங்கூனில் குடியேறியிருந்த பிராமணர்களுக்குப் புரோகிதம் செய்துவைக்கத் தொடங்கினார். புரோகித குடும்பத்தில் பிறந்தவராதலால் அவருக்குக் கொஞ்சம் மந்திரங்கள் தெரிந்திருந்தன. தெரியாததற்கு, அச்சடித்த புத்தகங்களை வாங்கி வைத்துக் கொண்டு சமாளித்து வந்தார்.

பரிசாரகத் தொழிலிலும், வைதிகத்திலும் சம்பாதித்த பொருளை வட்டிக்கு விட்டு விருத்தி செய்து வந்தபடியால் நாளடைவில் பணக்காரரானார். அவரிடம் லக்ஷம் ரூபாய் வரையில் ரொக்கம் உண்டு என்று ஜனங்கள் சொல்லிக் கொண்டார்கள்.

இரங்கூனிலிருந்த காலத்தில் சாஸ்திரிகள் கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்று விரும்பியது உண்டு. ஆனால் அந்த விருப்பம் நிறைவேற வில்லை. இப்போது வயது தாண்டிவிட்டபடியால் அந்த எண்ணத்தை விட்டுவிட்டார். திருவிடைமருதூரில் கொஞ்சம் நிலம் வாங்கிக் கொண்டு, போகிற வழிக்காக யாராவது ஒரு பையனைச் சுவீகாரம் செய்து கொண்டு தம் வாணாளைக் கழித்து விடுவது என்று தீர்மானித்திருந்தார். ஆனால், அவர் திரும்பி வந்த வருஷத்தில் நேர்ந்த மகாமகத்துக்காகக் கும்பகோணம் போயிருந்தபோது ஏற்பட்ட ஒரு சம்பவம், அவரது வாழ்க்கையில் பெரிய மாறுதல் ஏற்படுவதற்குக் காரணமாயிற்று.

ஜகதீச சாஸ்திரி தங்கியிருந்த வீட்டில், அவரைப் போலவே மகாமக ஸ்நானத்துக்கு வந்த நாகேசுவர ஐயரும், அவருடைய மூன்று புதல்விகளும் தங்கியிருந்தார்கள். விசாரித்ததில், நாகேசுவரய்யர் வைர வியாபாரி என்றும், இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி ஒன்றின் ஏஜண்ட் என்றும் தெரியவந்தது. அவர் பிறந்த தேசம் வட ஆற்காடு ஜில்லா. வெகு காலம் தெலுங்கு தேசத்திலும், பிறகு கொஞ்ச நாள் கல்கத்தாவிலும் வாசம் செய்தவர். அவருடைய குமாரத்திகளில் மூத்தவர்கள் இருவருக்கும் விவாகம் ஆகிவிட்டது. கடைசிப் பெண்ணுக்குக் கலியாணம் ஆகவில்லை. அவளுக்கு வயது பதினான்கு. பார்வைக்கு லட்சணமாயிருப்பாள். பிடில் அற்புதமாய் வாசிக்கத் தெரியும். வயது ஐம்பத்திரண்டு ஆனபோதிலும், ஜகதீச சாஸ்திரி நல்ல திட சரீரமுடையவராயிருந்தார். அவரைப் பார்த்தவர்கள் முப்பத்தெட்டு, நாற்பது வயதுக்கு மேல் மதிப்பிட மாட்டார்கள் என்று நாகேசுவரய்யர் அபிப்பிராயப்பட்டார். ஆகவே, கலியாணப் பேச்சு ஏற்பட்டது.

நாகேசுவரய்யர் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிக்குச் சேர வேண்டிய பணத்தைச் செலவழித்து விட்டு அதை ஈடு செய்ய முடியாமல் தவித்துக் கொண்டிருந்ததாய்த் தெரிய வந்தது. மேற்படி பாக்கி தீர்ப்பதற்காக ஜகதீச சாஸ்திரிகள் அவருக்கு ரூபா 6,000 கொடுத்து விடுவதென்றும், கலியாணத்தை ஆர்பாட்டம் எதுவுமில்லாமல் திருப்பதியில் உடனே நடத்தி விடுவதென்றும் ஏற்பாடாயிற்று. அவ்வாறே பணம் கொடுக்கப்பட்டு, கலியாணமும் நடந்தேறியது. நாகேசுவரய்யர் அவசர காரியமாய்க் கல்கத்தாவுக்குப் போய் விட்டார். அதற்குப் பிறகு அவரிடமிருந்து எவ்விதத் தகவலும் இல்லாதது ஜகதீச சாஸ்திரிகளுக்குக் கொஞ்சம் வியப்பாயிருந்தது. ஆனால், அவர் அதைப் பொருட்படுத்தவில்லை. தமது இளம் மனைவியை அழைத்துக் கொண்டு இரங்கூன் சென்றார்.

## 2

இரண்டு வருஷத்துக்குள் ஜகதீச சாஸ்திரிக்கு ஒரு புதல்வன் பிறந்தான். முதுவயதில் பிறந்த குழந்தையானபடியால் சாஸ்திரிகள் மகனை அருமையாய் வளர்க்கலானார்.

இரண்டு மூன்று வருஷத்துக்குப் பிறகு, ஊரில் அவர்

மனைவியின் நடத்தையைப் பற்றிப் பேச்சு உண்டாயிற்று. இது சாஸ்திரிகளின் காதுவரைக்கும் எட்டியது. எனினும், அவர் ஒன்றும் செய்வதற்கு வழியில்லாமல் இருந்தார். கடைசியாக ஒரு நாள் சாஸ்திரியார் வீட்டுக்குத் திரும்பி வந்தபோது மனைவியைக் காணவில்லை. பிடிலேயும், அணிந்திருந்த நகைகளையும், பெட்டியிலிருந்த பணத்தையும் எடுத்துக்கொண்டு, கிழவனுரைப் பரிதபிக்க விட்டுவிட்டுக் காணுமல் போய்விட்டாள் அவள்.

பையனுக்கு இப்போது வயது ஏழு. பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருந்தான். அவனுடைய படிப்பு முதலிய விஷயங்களில் சாஸ்திரியார் மனதைச் செலுத்தினர். முன்போல், சில முக்கியமான நண்பர்களின் வீடுகளில் புரோகிதமும் செய்துவந்தார். இவ்வாறு சிறிது சிறிதாக, சாஸ்திரி தமது துக்கத்தை மறந்து காலங் கழித்து வந்தார்.

இராமச்சந்திரன், இதுவே பையன் பெயர், நன்ருய்ப் படித்துப் பத்தொன்பதாம் வயதில் கல்கத்தா பி.ஏ. பரீட்சையில் தேறினன். அவனை அழைத்துக் கொண்டு சாஸ்திரிகள் 1930-ம் வருஷத்தில் மறுபடியும் தமது ஜன்ம தேசம் வந்தார்.

ஜகதீச சாஸ்திரிக்கு மாமா பிள்ளை ஒருவர் மயிலாப்பூரில் பிரசித்திப் பெற்ற வக்கீலாயிருந்து வந்தார். அட்வகேட் ஜெனரல் பதவி காலியானல், அவருக்குத்தான் கிடைக்கும் என்று சொல்லிக் கொண்டார்கள். அவர் பெயர் வி.வி. சீதாராமைய்யர் கப்பலை விட்டிறங்கிய ஜகதீச சாஸ்திரிகள், இவருடைய வீட்டில் இரண்டு நாள் தங்கினர். சீதாராமைய்யரின் மனைவி இராமச்சந்திரனைப் பார்த்தாளோ இல்லையோ, தன்னுடைய பெண் பார்வதியை அவனுக்குத்தான் கொடுக்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டாள். "இதைவிட நல்ல வரன் எங்கே கிடைக்கப் போகிறது? பையன் பி. ஏ. தேறி இருக்கிருன். ஐ. ஸி. எஸ். பரீட்சைக்குச் சீமைக்கு அனுப்பலாமே?" என்று சீதாராமைய்யரிடம் மனைவி சொன்னபோது, அவருக்கும் அது பிடித்தமாயிருந்தது. சாஸ்திரிகளிடம் விஷயத்தைத் தெரிவித்தார். அவருக்கும் சம்மதமாயிருந்தது. ஆனல், ஒரே ஒரு இடையூறு குறுக்கே நின்றது. அது தான், புதிதாக அப்போது நிறைவேறியிருந்த சாரதா சட்டம். பெண்ணுக்குப் பதினெரு வயதுதான் ஆகியிருந்தபடியால் சட்டத்தை மீருமல் கலியாணம் நடத்த முடியாது. அட்வகேட் ஜெனரல் பதவியை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் ஒருவர் சட்டத்துக்கு விரோதம் செய்ய முடியுமா?

ஆனல், சீதாராமையரின் மனைவிக்கு இவ்வளவு நல்ல மாப்பிள்ளையைக் கைநழுவ விடுவதில் பிரியமில்லை. கலியாணம் இப்போது நடக்காவிட்டாலும் தஸ்தவேஜி மூலமாய் நிச்சயதார்த்தம் செய்துவிட வேண்டுமென்று வற்புறுத்தினள். அவ்வாறே, சீதாராமைய்யர் தம்முடைய செலவில் பையனை ஐ.சி.எஸ். பரீட்சைக்குச் சீமைக்கு அனுப்ப வேண்டியதென்றும், மூன்று வருஷங் கழித்துக் கலியாணம் செய்துவிட வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. பெண் கறுப்பாயிருந்தபடியால் பையனுக்கு மட்டும் அவ்வளவு திருப்தியில்லை. ஆனல் தகப்பனர் வார்த்தையை முன்னிட்டும், சீமைக்குப் போக ஆசையாயிருந்தபடியாலும், அவன் ஆட்சேபிக்கவில்லை.

## 3

இராமச்சந்திரன் சீமைக்குப் பிரயாணமான பிறகு, ஜகதீச சாஸ்திரி திரும்பவும் இரங்கூனுக்குச் சென்ருர். ஆனல், இந்தத் தடவை அவர் மனம் அங்கு நிம்மதியாயில்லை. புதல்வன் பேரிலும், ஓடிப் போன மனைவியின் பேரிலும் அடிக்கடி ஞாபகம் சென்றது.

மன நிம்மதியில்லாமையால் தேக திடமும் குறைந்துபோயிற்று. உடம்பில் ஏதோ வியாதியென்று எண்ணி டாக்டரைக் கேட்டார். உடம்புக்கு ஒன்றுமில்லையென்றும், சொந்த நாட்டுக்குத் திரும்பிப் போய் விடுவது நல்லதென்றும் டாக்டர் சொன்ஞர். சாஸ்திரிகளுக்கும் இது உசிதமாய்த் தோன்றியபடியால், கடைசி முறையாக இரங்கூனை விட்டு இந்தியாவுக்குப் பிரயாணமானர்.

கப்பலில், எதிர்பாராத ஒரு சம்பவம் நேர்ந்தது. இரண்டாவது வகுப்பில் பிரயாணம் செய்த ஒரு ஸ்திரீ, காணுமற்போன தமது மனைவியைப் போல் இருந்ததாக அவருக்குத் தோன்றியது. கொஞ்சம் வித்தியாசம் இருந்தது வாஸ்தவந்தான். ஆனல், அவள் போய் இப்போது பதினைந்து வருஷங்களுக்கு மேல் ஆகிவிட்டதல்லவா? சென்னைக்குச் சமீபமாக வருவதற்குள் அந்த ஸ்திரீ தமது மனைவியாய்த்தானிருக்க வேண்டுமென்று சாஸ்திரிகள் முக்காலே மூன்று வீசம் பங்கு நிச்சயமாக எண்ணினர். கப்பல் துறைமுகத்துக்கு வந்து

சேர்ந்தது. அந்த ஸ்திரீ தன் சாமான்களுடன் இறங்குவதற்குத் தயாராய் நின்ற போது ஜகதீச சாஸ்திரிகள் அவள் எதிரில் போய் நின்ருர். ஒருவரை யொருவர் ஒரு கண நேரம் உற்று நோக்கினர்கள். "அங்கப்ப நாய்க்கன் தெருவு, 614-ம் நம்பர் வீட்டில் நான் தங்குவேன். என்னுடன் பேச வேண்டுமானல் அங்கே வாருங்கள்'' என்று அந்த ஸ்திரீ சொன்னள். "நீதானு? நான் நினைத்தது சரிதான்'' என்று சொல்லி சாஸ்திரி சிரித்தார்.

"ஆமாம்! நான் தான்'' என்று அவளும் சிரித்தாள்.

## 4

சாஸ்திரிகள், சம்பந்தி சீதாராமைய்யர் வீட்டில் மிக்க உபசாரங்கள் செய்யப் பெற்றுச் சுகபாக இரண்டு நாள் இருந்தார். தமிழ் நாடெங்கும் பஞ்சமர்களுக்குக் கோயிலைத் திறக்கும் விஷயத்தைப் பற்றியே பேச்சாயிருந்தது. "சநாதன தர்மம் போய் விட்டது'' என்று சீதாராமைய்யர் வீட்டில் எல்லோரும் சொன்னர்கள். சாஸ்திரிகளுக்கும் அப்படித்தான் தோன்றிற்று.

"சாரதா சட்டம் செய்யும் போது நீங்கள் எல்லாம் ஏன் சும்மா யிருந்திர்கள்? அதனுடைய பலன் தான் இது'' என்று சீதாராமய்யர் மனைவி சொன்னள்.

"உளராதே! அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?'' என்று சீதாராமய்யர் கேட்டார். "எல்லாம் ஒன்றுதான். சாஸ்திரத்துக்கு விரோதமாக ஒன்று நடந்தால் பிறகு எல்லாவற்றிற்கும் இடங்கொடுத்துப் போய் விடுகிறது'' என்ருள் அம்மாள்.

"ரொம்ப வாஸ்தவம்'' என்ருர் ஜகதீச சாஸ்திரிகள். சீதாராமய்யரிடம் தொழில் பழகும் வக்கீல் ஒருவர் அங்கிருந்தார். "ஆமாம் நீங்கள் கப்பலேறி இரங்கூனுக்குப் போனீர்களல்லவா? அதிலிருந்துதான் எல்லாவற்றிற்கும் இடங் கொடுத்து விட்டது'' என்று அவர் மெதுவாகச் சொன்னர்.

"இது என்ன சம்பந்த மில்லாத பேச்சு? ஜீவனர்த்தமாக இரங்கூன் போவதும், கோயில்களில் பறையர்களை விடுவதும் ஒன்றுதானு?' என்று சீதாராமய்யர் ஆத்திரமாய்ப் பேசினர்.

"சாஸ்திரத்தில் நாலு வர்ணங்கள் தானே சொல்லியிருக்கிறது? ஐந்தாவது வர்ணம் கிடையாதே. இந்த ஜனங்களை நாலாவது வர்ணமாகப் பாவித்து நடத்தினல் என்ன மோசம் முழுகிவிடும்?'' என்று சின்ன வக்கீல் கேட்டார்.

ஜகதீச சாஸ்திரிகள் "இங்கிலீஷ் மொழி பெயர்ப்புகளைப் படித்து விட்டு, சாஸ்திரங்களைக் கரை கண்டது போல் பேசுகிறீர்கள். ஆதி சிருஷ்டி நாலு வர்ணந்தான். அதற்குப் பிறகு வர்ணக் கலப்பு ஏற்பட்டு சங்கர சாதி உற்பத்தி யாயிற்று. பிரதிலோமச் சேர்க்கைகளின் பலனய்ச் சாதிச் சண்டாளர்கள் உண்டானர்கள்.''

சின்ன வக்கீல், "பிரம்மாவுடைய எண்ணம் சாயாமல் போச்சுபோ லிருக்கிறது. பறையன், பள்ளன், சக்கிலியன் எல்லாரும் கெட்டுப் போன பிராமண ஸ்திரீகளின் சந்ததிகள் என்று சொல்லுகிறீர்கள்?''

சாஸ்திரிகள் "அப்படியெல்லாம் நோண்டிப் பார்த்தால் சரிப்படாது. தலைமுறை தலைமுறையாக அவர்களைச் சண்டாளர்கள் என்று வைத்து நடத்தி வந்திருக்கிருேம். இதற்கெல்லாம் ருசு கேட்கக் கூடாது. நாம் பிராமணர்கள் என்பதற்கு ருசு என்ன?''

இதற்குள் கோர்ட்டுக்குப் போக நேரம் ஆகிவிட்டது. கூட்டம் கலைந்ததும், ஜகதீச சாஸ்திரி அங்கப்ப நாயக்கன் தெரு, 614-ம் நம்பர் வீட்டுக்குச் சென்ருர்.

## 5

அன்று மாலை ஜகதீச சாஸ்திரி சென்ட்ரல் ஸ்டேஷனில் டிக்கட் வாங்குமிடத்தில் நின்று காசிக்கு டிக்கட் கேட்டார். காலையில் அவரைப் பார்த்ததற்கு இப்போது பத்து வயது அதிகமானவராகக் காணப்பட்டார்.

"காசிக்கு எந்த மார்க்கமாய்ப் போகிறீர்கள், தாத்தா?'' என்று டிக்கட் குமாஸ்தா கேட்டான்.

"எந்த மார்க்கமா யிருந்தாலும் சரிதான், சுருக்கு வழியாய்க் கொடுங்கள். சீக்கிரம் கங்கையில் ஸ்நானம் செய்து பாவங்களைப் போக்கிக் கொள்கிறேன்'' என்ருர் சாஸ்திரிகள்.

ஜகதீச சாஸ்திரி அங்கப்ப நாயக்கன் தெரு, 614-ம் நம்பர் வீட்டில் தமது மனைவியைக் கண்டு தெரிந்து கொண்ட விவரங்கள் அவருக்கு அவ்வளவு வைராக்கியத்தை உண்டு பண்ணி விட்டன.

ஜகதீச சாஸ்திரியின் மாமனர் நாகேசுவர அய்யர் உண்மையில் ஐயருமல்ல; வைர வியாபாரியுமல்ல. அவரது உண்மைப் பெயர் பரியாரி நாகன். அஸிஸ்டென்ட் அக்

மகாத்மாவின் விடுதலைக்குப் பிறகு ராஜாஜி ஆசிரமத்துக்கு வந்து மற்றத் தொண்டர்களைப் போலவே தாமும் ஒரு குடிசையில் வசிக்கத் தொடங்கினார். அவருடைய கடைசிக் குமாரன் ஸ்ரீ. ஸி. ஆர். நரசிம்மனும், இளம் புதல்வி ஸ்ரீமதி லக்ஷ்மியும் தந்தையுடன் அதே குடிசையில் வசித்து எளிய வாழ்க்கை நடத்தினார்கள்.

ஆயிரக்கணக்கான மாத வருவாய் சம்பாதித்து நவநாகரிக முறையில் சகல சுகபோக சௌகரியங்களுடனே வாழ்க்கை நடத்திவந்த ராஜாஜியின் குடும்பம் திடீரென்று வாழ்க்கைமுறையை அடியோடு மாற்றிக்கொண்டு இரண்டே அறைகள் உள்ள சின்னஞ்சிறு குடிசையில் சந்தோஷமாக வசிக்கத் தொடங்கிய சம்பவத்தை நம்முடைய காலத்து அற்புதங்களில் ஒன்றாகவே சொல்ல வேண்டும். இம்மாதிரி அற்புதங்களுக்கு மகாத்மா காந்தியின் ஆத்ம சக்தியைத் தவிர வேறு காரணம் எதுவும் சொல்ல முடியாது. —கல்கி.

கவுண்டண்ட் ஜெனரல் தியாகராஜ அய்யர் அவனைக் கல்கத்தாவுக்குத் தம்முடன் அழைத்துச் சென்றார். அங்கே அவன் ஸலூன் வைத்து நடத்திக் கொண்டிருக்கையில் ஓர் அநாதைக் கைம்பெண்ணைச் சேர்த்துக் கொண்டு வாழ்ந்து வந்தான். பிறகு மோசத் தொழில்களில் புகுந்து கெட்டுப் போனான். இவர்களுக்குப் பிறந்த பெண்தான் ஜகதீச சாஸ்திரியின் மனைவி. நாகேசுவரய்யர் என்கிற பரியாரி நாகன், ஜகதீச சாஸ்திரியின் கலியாணத்திற்குப் பிற்பாடு, ஏதோ ஒரு மோசடி வழக்கில் ஏழு வருஷம் தண்டனை யடைந்து இப்போது லாகூர் சிறைச்சாலையில் கைதியாயிருந்தான்.

ஜகதீச சாஸ்திரியின் மனைவி இரங்கூனில் அவரை விட்டுப் பிரிந்த பிறகு சில நாட்கள் இங்குமங்கும் அலைந்து, கடைசியாக, சினிமாக் கம்பெனி ஒன்றில் சேர்ந்து நிறையப் பணம் சம்பாதித்து வந்தாள். தனக்குப் பணத்திற்குக் குறைவில்லை யென்றும், கூடியவரையில் சந்தோஷமாய்க் காலங் கழிப்பதாகவும், உதவி எதுவும் தேவை யில்லை யென்றும் தெரிவித்தாள்.

"நானும் என் தகப்பனும் சேர்ந்து உங்களை ஏமாற்றினோம். பகவான் தான் எங்களை மன்னிக்க வேண்டும்" என்றாள்.

ஜகதீச சாஸ்திரிகளுக்குத் தம் அழகிய மனைவியிடம் அன்பு அதிகரித்தது. குழந்தையைப் போல் அழுதார். "இந்தப் பாழும் சாதிகளை யார் சிருஷ்டித்தது? சுவாமி ஒருநாளும் சிருஷ்டித்திருக்க மாட்டார். போனதெல்லாம் போகட்டும். நாம் மறுபடியும் இந்த ஊரைவிட்டு இரங்கூனுக்குப் போய்ச் சௌக்கியமாயிருக்கலாமே?" என்றார்.

"ஐயோ! வேண்டாம். நீங்கள் என்னைத் தொடுவதற்குக் கூட நான் தகுதியற்றவள்: நான் கட்டிக்கொண்டிருக்கிற பாவம் பதினாலு தலைமுறைக்கும் தீராது. காசிக்குப் போய் கங்கையில் ஸ்நானம் செய்து என்னுடன் வாழ்ந்த பாவத்தைத் தீர்த்துக் கொள்ளுங்கள்" என்றாள் சாஸ்திரியின் மனைவி. அவ்வீட்டை விட்டு வெளியே வந்ததும் கிழவர் பெரிய பயங்கரத்தில் ஆழ்ந்தார்: சீமையில் படித்துக் கொண்டிருந்த தமது பையனை நினைத்துக் கொண்டார். சில மாத காலத்தில் அவன் திரும்பி வருவான்: கலியாணம் நடக்க வேண்டும். அவன் இந்த துன்மார்க்க ஸ்திரீயின் புதல்வன் என்று மட்டும் தெரிந்து விட்டால்?—அவள் என்ன சாதி? பையன் என்ன சாதி? சீதாராமய்யரும் அவர் மனைவியும் என்ன சொல்வார்கள்?— சாஸ்திரிகளின் தலை சுழன்றது. தள்ளாடிக் கொண்டே சென்று ஸ்டேஷனை அடைந்தார்.

## 6

சாஸ்திரிகள் ரயில் வண்டியில் பிரயாணம் தொடங்கிய இரண்டாம் நாள் இரவு, பக்கத்தி லிருந்த பிரயாணிகள் இரக்கங் கொண்டு கிழவருக்குப் படுக்க இடங் கொடுத்தார்கள். களைப்புற் றிருந்த சாஸ்திரிகள் விரைவில் தூங்கிவிட்டார். தூக்கத்தில் ஒரு பயங்கரமான கனவு கண்டார்.

* * * *

இராமச்சந்திரன் சீமையிலிருந்து திரும்பி வந்தான். பார்த்தால் பிராமணப் பையனாக இல்லை, சாபம் பெற்ற

திரிசங்குவைப்போல் பறைப் பையனுய் வந்து சேர்ந்தான்! ஐ.சி.எஸ். பதவி ஒன்றுமில்லை. கூலிக்காரப் பையனு யிருந் தான். ஆனுல்—கனவின் மாயை—சாஸ்திரிகள் முன்னை விட அதிகமாக அவனிடம் அன்பு கொண்டிருந்தார்.

சீதாராமய்யரும், அவருடைய மனைவியும், தங்களை வீட்டை விட்டுத் துரத்துவதாகக் கண்டார். தோட்டக்காரன், மோட்டார் டிரைவர், தோட்டி முதற்கொண்டு அவர்களை ஏளனமாகப் பேசி, வீட்டுக்கு வெளியே துரத்தியடித்தார்கள். தெருவில் கூட்டம் சேர்ந்து விட்டது. சாஸ்திரிகள் பிள்ளையுடன் எப்படியோ தப்பியோடினுர்......

சாஸ்திரிகள் இப்போது தமது சொந்தக் கிராமத்தில் இருந்தார். அவர் ஒரு பறைப் பையனைத் தம் வீட்டில் ஒளித்து வைத்திருக்கிருர் என்று ஊராருக்குத் தெரிந்து போயிற்று. அவர்கள் கூட்டமாய் வந்து அவரையும் அவர் பையனையும் அக்கிரகாரத்தை விட்டு ஓட்டினுர்கள்...........

சாஸ்திரிகள் மறுபடியும் தம் பிள்ளையுடன் சென்னைக்கு வந்தார். அங்கு ஒரு மோட்டார் பஸ்ஸில் ஏறினுர்கள். கண்டக்டர் வந்து "இந்த பையன் என்ன சாதி?" என்று கேட்டான். கழுத்தில் ருத்திராட்ச மாலையுடன் பஸ்ஸில் உட்கார்ந்திருந்த ஒரு கிழப் பிராமணர், "ஐயோ, இவன் பிரதிலோம சந்ததி, சண்டாளன்!" என்று கூச்சலிட்டார். "அவனை இறக்கி விடு" என்று வண்டியிலிருந்த எல்லோரும் கத்தினுர்கள். பஸ்காரன் பையனை இழுத்துக் கீழே இறக்கினுன். சாஸ்திரிகளும் உடனே குதித்து இறங்கினுர். வெட்கம் பொறுக்க முடியாமல் பக்கத்திலிருந்த ஒரு சந்தில் போய் இருவரும் ஒளிந்து கொண்டார்கள்...........

மறுபடியும் கனவு திடீரென்று மாறியது. மயிலாப்பூரில் சீதாராமையரின் ஆபீஸ். "என் குழந்தையை உங்களிடம் குமாஸ்தா வேலைக்கு வைத்துக்கொள்ளக் கூடாதா?" என்று சாஸ்திரிகள் சீதாராமையரைக் கெஞ்சிக் கேட்டார்..............

"அதெப்படி முடியும்? என் சம்சாரம் சண்டை பிடிப்பாளே?" என்ருர் சீதாராமையர். அச்சமயம் சீதாராமையர் மனைவி அங்கு வந்து சேர்ந்தாள். ஜகதீச சாஸ்திரி பயத்தால் நடுநடுங்கினுர்.

"பறைப் பையன் எங்கள் ஆபீஸில் உட்கார்ந்து வேலை செய்வதா? ரொம்ப நன்ருயிருக்கிறது! எங்களுக்கு வேண்டாம். பணத்தைக் கீழே வையும்?" என்று சொல்லிச் சீதாராமையரின் மனைவி தஸ்தாவேஜை எடுத்து நீட்டினுள். அது, இராமச்சந்திரன் கலியாணத்தைப் பற்றிய தஸ்தாவேஜு. சீதாராமையர் அதுவரை 15,000 ரூபா இராமச்சந்திரனுக்காகச் செலவு செய்திருந்தார் அதைத் திருப்பிக் கொடுக்கும்படி சாஸ்திரிகளைக் கேட்டார்கள்.

காட்சி மறுபடியும் மாறியது. ஒரு மடாதிபதி காஷாயதாரியாய், கையில் திரிதண்டத்துடன் மான் தோல் ஆஸனத்தில் வீற்றிருந்தார். "சுவாமி! என் மகனை பிராமணனுக்க முடியாதா?" என்று சாஸ்திரிகள் கேட்டார். காஷாயதாரி உச்சஸ்வரத்தில் சொல்லுகிருர்: முடியவே முடியாது. சாதிச் சண்டாளனுக்குப் பிராயச்சித்தம் இல்லை. அவனுடைய நீச உடம்பு எரிந்து சாம்பலான

---

வாழைப்பழம், மாங்கனி, பலாப்பழம் இவற்றின் சுவையை அனுபவித்த குழந்தைகளை, அந்தப் பழங்களின் சுவையைத் தனித் தனியாக இலக்கணம் கூறி விவரிக்கச் சொன்னுல், அந்தக் குழந்தைகளால் சொல்ல முடியுமா? முடியாது. அவ்வாறே, "திருந்திய தமிழ் மக்களின் பண்பாடு எத்தகையது? விவரமாகச் சொல்லுங்கள்" என்ருல், நம்மால் சொல்ல முடியாது. தமிழ் மக்களுடைய ஆட்டம், பாட்டு, திருவிழாக்கள், வீடுகளில் இடும் கோலம், விளையாடும் விளையாட்டு இவை போன்ற மற்ற அனைத்தும் சேர்ந்து தமிழ்ப் பண்பாடு ஆகிறது. இந்தத் தமிழ்ப் பண்பாட்டில் வேர் ஊன்றிக் கலந்த ஒன்று பொங்கல் விழா. —ராஜாஜி.

---

பிறகு தான் சண்டாளத்துவம் நீங்கும். இந்த ஜன்மத்தில் தன் குல தர்மத்தைச் சரிவரக் கடைப்பிடித்து வந்தானானால், அடுத்த ஜன்மத்தில் கொஞ்சம் உயர்ந்த குலம் சித்திக்கலாம். ஆனால் அனேக ஜன்மம் எடுத்த பிறகு தான் பிராமணனாக முடியும்."

ஜகதீச சாஸ்திரி கோபாக்கிராந்தராகிக் கூச்சலிட்டார்.

"அட பாவி! நீ சன்னியாசியா? நம்பிக்கைத் துரோகக் கேஸை மறந்தாயா? பொய் விண்ணப்பங்கள் போட்டாயே! குடிக்கூலிக்கு எடுத்த சாமானை விற்றாயே! ஜயிலுக்குப் போகவேண்டியவன் அபராதத்தோடு தப்பித்துக் கொண்டாயே! அதற்கெல்லாம் ஒன்றுமில்லையோ?"

மடாதிபதியின் கண்கள் கோபத்தால் சிவந்தன. "பிரஷ்டா! உன்னைச் சபித்தேன்! என் பூர்வாசிரமத்தைப்பற்றிப் பேசிவிட்டாய்!" என்று சொல்லிக் கொண்டு தண்டத்தைத் தூக்கி அடிக்க வந்தார். சாஸ்திரி ஓடி வாசல் கதவில் தலையை முட்டிக் கொண்டார்.

*　　*　　*

தூங்கிக்கொண்டிருந்த கிழவர் ரயில் பலகையிலிருந்து புரண்டு கீழே விழுந்தார். அந்த அதிர்ச்சியில் கண் விழித்தார். பக்கத்திலிருந்தவர்கள் அவரைப் பார்த்துச் சிரித்தார்கள்.

## 7

மறு நாள் இரவும் சாஸ்திரிகளுக்குத் தூக்கத்தில் இதே மாதிரி மகனைப் பற்றிய கனவுகள் வந்தன. கண்ணை மூடினால் உடனே சொப்பனந்தான்.

சாஸ்திரிகள் மறுபடியும் தம் புதல்வனுடன் அலைந்து கொண்டிருந்தார். பசி எடுத்து ஒரு காப்பி ஹோட்டலுக்குள் இருவரும் சென்றார்கள். பரிசாரகன் இலையில் இட்டிலி கொண்டு வந்து இரண்டு பேருக்கும் வைத்தான். சாப்பிட ஆரம்பிக்கும் போது அங்கே உட்கார்ந்து சாப்பிட்டுக்கொண்டிருந்தவர்களில் ஒருவர், "அந்தப் பையன் யார்?" என்று கேட்டார். சாஸ்திரிகள் திடுக்கிட்டுப் பதில் சொல்லாமல் இருந்தார். "அவன் சண்டாளன்" என்று ஒரு குரல் கேட்டது. உடனே எல்லோரும் சேர்ந்து "சண்டாளன்! சண்டாளன்! துரத்துங்கள் வெளியே!" என்று கத்தினார்கள். பரிசாரகன், பையன் முன் இருந்த இட்டிலியை எடுத்து எச்சில் தொட்டியில் எறிந்து விட்டு, பையனைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளினான். "என் மகன்! என் மகன்!" என்று கத்திக் கொண்டு சாஸ்திரிகள் அவன் பின்னோடு வெளியேறினார்.

கும்பகோணம் ராவ் பஹதூர் நரசிம்மாச்சாரியார் டில்லி சட்ட சபை அங்கத்தினர். "நீங்கள் டில்லிக்குப் போகும்போது என் பையனைக் குமாஸ்தாவாக அழைத்துக் கொண்டு போங்களேன். பையன் பி. ஏ. படித்திருக்கிறான். என்னுடைய பாவத்தினால் திடீரென்று பறைப் பையனாகி விட்டான்" என்றார்.

"முடியாது, சாஸ்திரிகளே! டில்லியில் நம்ம ஊர்க்காரர்கள் சாதி வித்தியாசம் அதிகமாய்ப் பார்ப்பதில்லை என்பது வாஸ்தவந்தான். ஆனாலும் பறைப் பையனை வீட்டுக்குள் எப்படி வைத்துக்கொள்ள

முடியும்? சூத்திரப் பையனு யிருந்தாலும் பாதக மில்லை'' என்றார் நரசிம்மாச்சாரியார். ''அப்படியானால் அவனை சூத் திரப் பையனாய்ச் செய்து விடட் டுமா?'' என்று சாஸ்திரிகள் ஆவலுடன் கேட்டார்.

''நான் எப்படி யப்பா சூத்தி ரப் பையனாக முடியும்? நான் தான் சங்கர சாதியாச்சே? நீங்கள் தானே அப்படிச் சொன்னீர்கள்?'' என்றான் பையன்.

''ஐயோ, வாஸ்தவந்தான். சாஸ்திரங்களை யாராவது கொளுத்திச் சாம்பலாக்க மாட்டார்களா?'' என்று சாஸ்திரி கத்தினார்...............

''அப்பா! அப்பா! ரயில் போர்ட்டர் வேலைக்குப்போய் விடுகிறேன். அங்கே யாரும் என்னைத் தொந்தரவு செய்ய மாட்டார்கள்'' என்றான் இரா மச்சந்திரன்.

''அதையும் பார்க்கலாம், குழந்தாய்!'' என்றார் சாஸ்தி ரிகள். உடனே இராமச்சந் திரன் ரயில் போர்ட்டராக மாறினான். முதல்முதல்அவன் தூக்கிய பெட்டிக்கு நாலு அணா கிடைத்தது. அடுத்த தடவை அவன் இன்னொருவ ருடைய பெட்டியையும் மூட் டையையும் தூக்கிக்கொண்டு கிளம்பியபோது, ஒரு பையன் ஓடிவந்து, ''சாமி! சாமி! அவன் பறைப் பையன்'' என் றான்.

பெரிய மூட்டைகளின் சொந்தக்காரர் ஒரு பிராமண உத்தியோகஸ்தர். அவர், ''அட பயலே! எப்படியடா என் மூட்டையைத் தொட் டாய்?'' என்று கத்திக் கொண்டே குடை நுனியால் பையன் முதுகில் குத்தினார். அவன் பெட்டியையும் படுக் கையையும் கீழே போட்டு விட்டு ஓடினான்.

சாபத்துக்காளான பிள்ளை யுடன் சாஸ்திரிகள் மீண்டும் அலையலானார். ஆகாய வெளி யில் எங்கிருந்தோ ''சண்டா ளன்! சண்டாளன்!'' என் னும் சப்தம் வந்துகொண் டிருந்தது. மரங்களின் இலை கள் ஆடும் ஓசை 'சண்டா ளன்' 'சண்டாளன்' என்பது போலத் தோன்றிற்று. பட்சி களும் 'சண்டாளன்' 'சண்டா ளன்' என்று பாடின.

பையனுடன் அலைந்து அலைந்து, கிழவர் களைப்புற் றுப் போனார். கால் வலித்தது. தாகம் தொண்டையை வறட் டிற்று. சமீபத்தில், குளம் கிணறு ஒன்றையும் காணோம்.

''குழந்தாய்! ரொம்பத் தாகமா யிருக்கிறது. கொஞ் சம் தண்ணீர் வாங்கிக் கொண்டு வருகிறாயா?'' என்று சாஸ்திரிகள் சொன் னார்.

''நான் கேட்டால் யார் கொடுப்பார்கள், அப்பா!'' என்றான் ராமச்சந்திரன்.

''வாஸ்தவந்தான், குழந் தாய்! நாம் சாகவேண்டியது தான்.''

''சாகவாவது! அப்பா, எழுந்து நடங்கள். சீமைக்குப் போவோம். அங்கே சாதித் தீட்டுக் கிடையாது''

''சீமைக்கு எப்படிப் போ வது? நாம் இன்னும் விருத் தாசலத்தில் தானே இருக்கி றோம்?''என்றார் சாஸ்திரிகள்.

''அதோ ஒரு படிக்கிணறு இருக்கிறது. இறங்கித் தண் ணீர் குடிக்கலாம்'' என்று பையன் அழைத்துக்கொண்டு போனான். பயந்து நடுங்கிக் கொண்டே கிணற்றில் இறங் கினார்கள். அங்கு ஒருவரும் இல்லை. இருவரும் தாகம் தணியும்படி தண்ணீர் குடித் தார்கள். மறுபடியும் படியி லேறி வெளியே வந்துகொண் டிருக்கையில், கிழவி ஒருத்தி அங்கே வந்தாள். அவர்களைப் பார்த்ததும், ''ஐயோ! இதென்ன? யாரோ பறைப் பையன் வந்து ஊர் கிணற் றைத் தீட்டாக்கி விட்டானே, பாவி!'' என்று கூச்சலிட் டாள்.

உடனே அங்கு ஒரு கூட் டம் சேர்ந்து விட்டது. எல் லாரும் சேர்ந்து இராமச்சந் திரனை அடிக்க வந்தார்கள். சாஸ்திரிகள் பையனைக் கை யைப் பிடித்து அழைத்துக் கொண்டு ஓடினார். தூரத்தில் ஒரு கோயில் தென்பட்டது. ''சுவாமி! பகவானே! நீதான் காப்பாற்றவேண்டும்'' என்று சத்தமிட்டுக் கொண்டு கோ யிலை நோக்கி ஓடினார். ஆனால் கோயில் அருகில் வந்ததும், சந்தேகம் வந்து விட்டது.

''பகவானே! எல்லாரும் என் பையனைச் சண்டாளன் என்றார்களே! உன்னுடைய கோயிலுக்குள்ளாவது நாங் கள் வரலாமா? உன்னைத் தவிர எங்களுக்குக் கதி வேறு யார்?'' என்று கதறினார்.

''வரலாம், அனைவருக்கும் தாயும் தகப்பனும் நான்''

''ராஜாஜி, கம்பருக்கு விளக்கம் தருவதுபோல் வேறு யாரும் எனக்கு விளக்கம் தருவதில்லை. ராஜாஜியுடன் பழகிய பின்னர்தான் கம்பர் வகுத்திருக்கும் ராமனை நான் நன்றாக அறிந்து கொள்ள முடிந்தது''

டி. கே. சி.

என்று கோயிலுக்குள்ளிருந்து அசரீரி போல் ஒரு சப்தம் வந்தது.

சாஸ்திரிகளும் பையனும் உள்ளே நுழைந்தார்கள். "அப்பா! கடைசியாக அடைக்கலத்திற்கு ஓர் இடம் கிடைத்தது" என்று பெருமூச்சு விட்டார் சாஸ்திரிகள்.

அதற்குள்ளாக "ஐயோ! சண்டாளன் கோயிலுக்குள் வந்து விட்டானே" என்று கூவிக்கொண்டு அர்ச்சகர் ஓடி வந்தார். இன்னும் பலரும் எங்கிருந்தோ மள மளவென்று வந்து அவர்களைச் சூழ்ந்து கொண்டார்கள்.

"பறைப்பையனுக்குஎன்ன தைரியம்? அடியுங்கள்! உதையுங்கள்!" என்ற கூக்குரல் எழுந்தது.

"ஐயோ! அவன் பறையன் அல்ல: என் பிள்ளை, என் பிள்ளை" என்று சாஸ்திரிகள் கத்தினர்.

அந்தச் சமயத்தில் சாஸ்திரியின் மனைவி அங்கு எவ்வாறோ வந்து சேர்ந்தாள். "அது பொய்! கிழவனை நம்பாதீர்கள்! அவன் என் பிள்ளை. நான் சங்கர சாதி. பையன் சண்டாளன் தான்" என்று அவள் கூவினள்.

"அடி பாவி! துரோகி! சண்டாளி!" என்று சாஸ்திரிகள் கூச்சலிட்டார். பிறகு கூட்டத்தை நோக்கி, "பகவான் அசரீரியாக வாக்குக் கொடுத்தாரே, உள்ளே வரலாமென்று சொன்னரே" என்று கத்தினர்.

"பொய், பொய்: அசரீரியாவது ஒன்ருவது? பறைப்பையனை உதையுங்கள், கொல்லுங்கள்" என்று கத்திக் கொண்டு ஜனங்கள் இராமச்சந்திரன் மீது விழுந்து தாக்கினர்கள்.

* * * *

"ஐயோ" என்று கத்திக் கொண்டு சாஸ்திரி தூக்கத்திலிருந்து எழுந்து உட்கார்ந்தார். அவரைத் தட்டி எழுப்பிய டிக்கட் கலெக்டர், "ஏன் தாத்தா அலறுகிறீர்? டிக்கட்டைக் காட்டும்" என்ருன்.

நல்லவேளை, எல்லாம் கனவு தான். என்ருலும், சாஸ்திரிகளின் உடப்பு வெகு நேரம் நடுங்கிக் கொண்டிருந்தது. ரயில் ஓடும் சத்தங்கூட அவர் காதில் 'சண்டாளன், சண்டாளன்' என்பது போல ஒலித்தது.

## 8

### மங்களம்

சில நாட்களுக்குப் பின் இராமச்சந்திரன் சீமையிலிருந்து திரும்பி வந்து கர்நூலில் அஸிஸ்டெண்ட் கலெக்டரானன். ஜகதீச சாஸ்திரியின் மனைவி வெளியிட்ட விவரங்கள் இராமச்சந்திரனுக்காவது, சீதாராமய்யருக்காவது ஒன்றும் தெரியாது.

கிழவரைக் காணேமே என்று எல்லாரும் பரிதபித்துச் சில நாள் பேசிக் கொண்டார்கள். திடீரென்று வைராக்கியம் பிறந்து காசி யாத்திரை போய் அங்கே சந்நியாசம் வாங்கிக்கொண்டார் என்று சிலர் சொன்னர்கள்: கங்கா நதியில் முழுகி இறந்து போனர் என்று வேறு சிலர் சொன்னர்கள்.

கொஞ்ச நாள் பார்த்தும் அவர் வராமல் போகவே, உடன்படிக்கையில் கண்டபடி, சீதாராமையரின் புதல்விக்கும், அஸிஸ்டெண்ட் கலெக்டர் ஜெ. ஆர். சந்திராவுக்கும் விவாகம் சிறப்பாக நடந்தேறியது.



அமரகவி பாரதியார்

பிரதமர் ஜவஹர்





தமிழகத்தின் தலைவர் காமராஜ நாடார்

# கவர்னர் பதவி

**ராஜாஜி**

நம்முடைய மகத்தான ஆலயங்களை நீங்கள் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். ஆலயத்திலே ஒரு விக்கிரகத்தை வணங்குகிறோம். ஆலயத்தில் உள்ள விக்கிரகம் ஒரு வேலையும் செய்யாது; ஆலயச் சிப்பந்திகள்தாம் வேலை செய்யவேண்டும். ஆனால், ஆலயத்திலிருந்து விக்கிரகத்தை அகற்றிவிட்டால், ஆலயத்தில் உள்ள ஒரு சிப்பந்தியும் வேலை செய்யமாட்டார். விக்கிரகத்துக்கு உயிர் இல்லை; என்றாலும், ஆலயத்தில் அது அவசியமாக இருக்கிறது.

இதே போலத்தான் அரசாங்கம் என்ற கோயிலில், நிர்வாக காரியங்களைக் கவர்னர் புரிவதில்லை; என்றாலும் அவர் அவசியமாக இருக்கிறார். விக்கிரகத்தின் பயனும் அவசியமும், அதனிடம் நீங்கள் காட்டும் பக்தியையே பொறுத்திருக்கின்றன. கவர்னரிடம் நீங்கள் அனைவரும் மரியாதையும் பக்தியும் காட்டுவீர்களானால், உங்களுக்கு ஏதோ சிறிது பணி புரிய அவருக்குச் சக்தி ஏற்படும். கவர்னரை நீங்கள் அலட்சியம் செய்வீர்களானால், அவர் வரவரச் சக்தியற்றுப் போவார்......கவர்னர் இல்லாத சர்க்கார், சாமி இல்லாத கோயில் ஆகிவிடும்.

சுதந்தரத்துக்கு ஒரு தர்மசாஸ்திரம் உண்டு. அதை நாம் பின்பற்ற வேண்டும். மக்களில் பெரும்பான்மையோருக்கு மாத்திரம் கவர்னர் உரியவர் அல்ல; முழு ராஜ்யத்துக்குமே உரியவர். இம்மாதிரியே ஒரு பிரதம மந்திரி, அந்தப் பதவியை ஏற்கும் வரைக்கும், பெரும்பான்மைக் கட்சிக்கு உரியவர்; பதவியை ஏற்றதும், முழு ராஜ்யத்துக்குமே உரியவர் ஆகிறார், ஆனால், சில சமயங்களில் ஜனநாயக சர்க்கார்கள், தாங்கள் முழு ராஜ்யத்துக்குமே உரியவர்களாக இருந்தும், சிறுபான்மை மக்களை மறந்துவிட நேரலாம். ஆகையால், 'நாம் முழு ராஜ்யத்துக்கும் உரியவர்; பெரும்பான்மை மக்களுக்கு மாத்திரம் அல்ல' என்று அவர்கள் சதாகாலமும் தங்களைத் தாங்களே ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும்.

# ராஜாஜி

சேலம் ஜில்லா ஹொஸூர் கிராமத்தின் முன்ஸீப் சக்கரவர்த்தி ஐயங்கார் என்ற வைஷ்ணவருக்கு 1879-ஆம் வருஷத்தில் ஒரு குழந்தை பிறந்ததும், அது உலகத்தையே ஆளப் பிறந்தது என்று அதன் பெற்றோர்கள் நிச்சயம் நினைத்திருக்க மாட்டார்கள். குழந்தை பிறந்ததும் ஜாதகத்தைப் பார்த்தார் தகப்பனார். திடுக்கிட்டுப் போய்விட்டார். புராண புருஷர்களான ராமன், கிருஷ்ணன், மதஸ்தாபகர்களான சங்கரர், ராமாநுஜர் ஆகியவர்களைப்போல் ராஜாஜி வாழ்வார் என்று ஜாதகம் காட்டியது. மகா உன்னத பதவி தொடங்கி மகா மோசமான கஷ்டங்கள், சமூகத் துவேஷங்கள் வரையில் சகலமும் இவர் அநுபவித்து விடுவார் என்றும் அது காட்டியது. தகப்பனாருக்கு திகில். ஜாதகபலன்களை யாருக்கும் சொல்லாமல் வெகு நாள் வரையில் தம் மனத்துக்குள்ளேயே வைத்துக்கொண்டார். மனைவி திரும்பத் திரும்ப அலட்டியதால், அவளுக்கு மாத்திரம் சொன்னார். ஜாதகம் இதுவரையில் பலித்து வருகிறது. இந்த 1948-ஆம் ஹு ஜூன் மீ 21-ஆம் தேதி இந்தியாவின் முடிசூடிய மன்னருக்குச் சமதையான கவர்னர்-ஜெனரல் பதவியை ராஜாஜி வகிக்கிறார்.

ராஜாஜி கவர்னர்-ஜெனரல் பதவி வகிக்கப் போவது பற்றிப் பற்பல கதைகள் உண்டு. அவற்றில் ஒன்று மிகவும் ரசமானது.

1929-ஆம் ஹு புது டில்லியில் ஸர் டி. விஜயராகவாச்சாரியாருடன் ராஜாஜி தங்கியிருந்தார். ஸர் டி. வி. யின் மகன் ராமபத்திரனும் கணிதப் புரொபஸர் டாக்டர் விஜயராகவன் என்ற ஒரு நண்பரும் வைஸிராய் மாளிகைக்கு ஏதோ காரியமாகப் போய் வந்தார்கள். வைஸிராய் மாளிகையை ஸர் டி. வி. அவர்களின் மகன் தம் தந்தையிடம் புகழ்ந்து வர்ணித்துக்கொண்டிருந்தார். அப்போது டாக்டர் விஜயராகவன் என்ற நண்பர் திடீரென்று ஸர் டி. வி. யை நோக்கித் திரும்பி, "ஸார், ஒரு வேளை நீங்கள் ஒரு நாள் இந்த மாளிகையில் வசித்தாலும் வசிக்கலாம்'' என்றார். அவர் அதோடு நிற்கவில்லை. மறுபடியும் ராஜாஜியை நோக்கி, "அல்லது நீங்கள் ஒரு நாள் இதை அலங்கரிக்கலாம்'' என்றார்.

ராஜாஜி புன்னகை புரிந்து "அப்படியே நிகழலாம். யார் கண்டது?'' என்றாராம்.

இது நடந்து பதினெட்டு வருஷங்கள் ஆகி, ராஜாஜி அந்த மாளிகையை இப்போது அலங்கரிக்கிறார்.

ராஜாஜி சென்னையில் சட்ட கலாசாலையில் படித்துக் கொண்டிருந்த போதே, அவருக்குச் சமூகச் சீர்திருத்த ஆவல் பிறந்து விட்டது. அப்போது சுவாமி விவேகானந்தரை ராஜாஜி சந்தித்தார். அதிலிருந்தே ராஜாஜிக்கு இந்த ஆவல் வலுத்தது. தீண்டாமைக் கொடுமையையும் மதுபானத்தையும் நாட்டிலிருந்து ஒழிக்க வேண்டுமென்று அவர் உள்ளத்தில் ஒரு துடிப்பு ஏற்பட்டது.

மகாத்மா காந்தி தமது முதல் சத்தியாக்கிரக இயக்கம் சம்பந்தமாகச் சென்னைக்கு வந்தபோது, ராஜாஜி சென்னையில் பிரபல வக்கீல். ராஜாஜியின் வீட்டில்தான் காந்திஜி தங்கினார். ஆனால், இருவருக்கும் அதற்கு முன்பு பரிசயம் இல்லை. தம் வீட்டிலே காந்திஜி தங்கியிருந்தும், அவரைப் போய்ப் பார்த்துத் தொல்லை கொடுக்க ராஜாஜிக்கு இஷ்டமில்லை. யார் தம்மை உபசரிக்கும் விருந்தாளி என்பதைப் பற்றிய சிந்தனையே காந்திஜிக்கும்

**பாரதி மண்டபம் கட்டிய போதும் வ. உ. சி. விழாக் கொண்டாடிய போதும் சில சந்தேகப் பிராணிகள், "தமிழர்கள் செத்துப் போனவர்களைத்தான் கொண்டாடுவார்கள்!'' என்று குறை கூறினார்கள். "அப்படியில்லை; ஜீவிய வந்தர்களான பெரியோர்களையும் போற்றுவோம்; திருவிழாக் கொண்டாடுவோம்!'' என்று இந்த வருஷ முடிவிற்குள்ளேயே தமிழ் மக்கள் நிரூபித்து விட்டார்கள். இதைவிட மகிழ்ச்சி தரும் விஷயம் வேறு என்ன உண்டு? —கல்கி.**

இல்லை. மகாதேவ தேசாய்தாம், "நாம் யார் வீட்டில் தங்கி யிருக்கிறோம் தெரியுமோ? ஸி. ராஜகோபாலாச்சாரியார் என்ற வக்கீல் வீட்டில். அவர் அபூர்வ குணவந்தர்; சிறந்த புத்திமான்" என்று காந்திஜிக்குத் தெரிவித்தார்.

உடனே ராஜாஜிக்கு ஆள் விட்டார் மகாத்மா. அவரும் வந்தார். அப்போதுதான் இருவரும் முதல் முதலாகச் சந்தித்துப் பேசினார்கள்.

இதே காலத்தில் இன்னொரு சம்பவம் நடந்தது. தம்மை வந்துபார்த்தவர்களுக்கெல்லாம் தம் சத்தியாக்கிரகக் கொள்கைகளைப் பற்றிக் காந்திஜி விளக்கிச் சொன்னார். சில சமயம் இடையிடையே ராஜாஜியும் அருமையான உபமான உபமேயங்களைக் கூறி, நண்பர்களின் சந்தேகங்களைத் தீர்க்கலானார். காலஞ்சென்ற ஸ்ரீ ஸி. விஜயராகவாச்சாரியார் இப்படிப்பட்ட ஒரு சம்பாஷணையின் போது, கூட இருந்தார். ராஜாஜியின் சமாதானங்களைக் கேட்டதும், காந்திஜியைப் பார்த்து ஸ்ரீ விஜயராகவாச்சாரியார், "சத்தியாக்கிரகத்தைப் பற்றி நீங்கள் ஏதாவது புஸ்தகம் எழுதி, அதை இவருக்கு இரவல் கொடுத்திருக்கிறீர்களோ?" என்று கேட்டார்.

"இல்லை. இதுவரைக்கும் அப்படியொன்றும் நான் புஸ்தகம் எழுதவில்லை. மற்றவரோடு சர்ச்சை செய்வது போலவே, அவரோடும் ஒருமுறை சர்ச்சை செய்திருக்கிறேன். அவருக்கு நல்ல புத்திக் கூர்மை இருக்கிறது. சத்தியாக்கிரகத்தின் அடிப்படைத் தத்துவத்தையும் பலாபலன்களையும் நன்றாகக் கிரகித்துக் கொண்டிருக்கிறார். சத்தியாக்கிரகத்தின் கர்த்தாவான என்னைப் போலவே, அவரும் அதற்கு வியாக்யானம் செய்யக்கூடிய சிறந்த பிரமாண கர்த்தா என்று நான் சிறிதும் தயக்கமில்லாமல் ஒப்புக்கொள்கிறேன்" என்றார் காந்திஜி.

திருச்செங்கோட்டில் ராஜாஜி ஒரு சத்தியாக்கிரக ஆசிரமம் தொடங்கினார். அதில் ஹரிஜனங்களும் பிராமணர்களும் ஒன்றுகச் சமபந்தி போஜனம் செய்தார்கள். இதைக் கண்டு ஊரா ரெல்லாரும் தூஷித்தார்கள். ஜனங்களின் அறியாமையும்மூட நம்பிக்கையும் மிதமிஞ்சி இருந்தன. ஆசிரமத்துக்கு நூல் கொண்டுவந்து கொடுக்க ஒரு நாள் இரண்டுநாட்டுப்புறப்பெண்கள் வந்தார்கள். அவர்கள் படிப்பறியாத பாமரர்கள். ஆசிரமவாசிகளில் ஒருவர் தலை கீழாக நின்று யோகப் பயிற்சி செய்து கொண்டிருந்தார். அந்த இரண்டு பெண்களும் இதைக் கண்டு, கிராமத்துக்குள்ளே போய் ஒரு கதையைப் பரப்பி விட்டார்கள். "அந்தப் பிராம்மணரின் ஆசிரமத்திலே சில பயல்கள், வானத்தைப் பார்த்துக் காலை நீட்டிக் கொண்டிருக்கிறார்கள். வானத்துக்கு இதிலே கோபம் வந்துவிட்டது. அதனால் தான் மழை பெய்யவில்லை" என்று சொன்னார்கள்! கிராமவாசிகளின் இத்தகைய மூட நம்பிக்கைக்கு நடுவே, ராஜாஜியின் ஆசிரமம் போராட வேண்டியிருந்தது.

மகாத்மாவின் சத்தியாக்கிரக இயக்கங்களிலெல்லாம் அவருக்கு வலது கையாக விளங்கியவர் ராஜாஜி. ராஜாஜியிடம் மகாத்மாவுக்கு அளவிறந்த மதிப்பு. மகாத்மாவுக்குக்கூட ஒரு திட்டம் வகுக்க முடியாத காலங்களில் ராஜாஜியைத் தான் அவர் உதவிக்கு அழைப்பார்.

ராஜாஜி தமிழ்ப் பற்று நிறைந்தவர். பல தமிழ்ப் புஸ்தகங்கள் எழுதியுள்ளார். உபநிஷத்தையும் கீதையையும் அழகாக விளக்கியிருக்கிறார். சிறு கதைகள் எழுதி யிருக்கிறார்.

அவர் துறவியைப்போல் பற்றற்று மனத்தூய்மையுடன் வாழ்பவர். 1915-ஆம் ஆண்டு மனைவியை இழந்தார். நண்பர்களெல்லாரும் அவரை மறு மணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தினார்கள்.

"உங்களுக்கு ஐந்து குழந்தைகள் இருக்கிறார்கள். அவர்களைக் காப்பாற்ற வேண்டாமா? அதற்காக வாவது கட்டாயம் நீங்கள் மறு மணம் செய்து கொள்ள வேண்டும்" என்று அவர்கள் சொன்னார்கள்.

"ஆமாம்; வீட்டிலே இப்போதே ஐந்து குழந்தைகள் இருக்கின்றன. ஆறாவது குழந்தை ஒன்றையும் கொண்டு வந்து வைத்துக்கொள்ள வேண்டுமா?" என்று பளிச்சென்று பதிலளித்தார் ராஜாஜி.

நம் முதல் இந்திய கவர்னர்-ஜெனரலாக இப்போது அவர் பதவி ஏற்கிறார். ராஜாஜி பொம்மை கவர்னர்-ஜெனரலாக இருக்கமாட்டார். அவர் வங்காள கவர்னர் பதவி வகித்து வந்த விதமே இதற்குச் சான்றாகும். 'அவருடைய மதியூக ராஜதந்திரத்தினால், காஷ்மீர், ஹைதராபாத் பிரச்னைகளில் ஒரு முடிவு ஏற்படும்; பாகிஸ்தான், இந்திய யூனியன் உறவு வளரும்; நாட்டுக்கு க்ஷேமம் ஏற்படும்' என்றே அரசியல் அறிஞர்களெல்லாம் எதிர்பார்க்கிறார்கள்.

**சத்தியாக்கிரஹி என்ற முறையில் சட்டத்தை மீறிச் சிறை செல்லுவதற்கு ஸி. ஆர். தமிழ் நாட்டுக்கு வழி காட்டினார் என்று சொல்ல வேண்டும்.** —கல்கி.

# சேலம் நீர்க்குழாயின் நிகழ்ச்சி

### தே. ஸ்ரீ. ரா.

மணம் வெகு சிறப்பாகவே முடிந்தது. எல்லோருக்கும் திருப்திதான். ஆனல்—

சேலம் இரண்டாவது அக்கிரகாரத்தில் 39 வருஷங்களுக்குமுன் நடந்த கலியாணம் ஊராருக்கு ஒரு புது உணர்ச்சியைக் கொடுத்தது. சமுதாய சீர்திருத்தம் என்ற கொடி கட்டி எழுந்த தீவிர இயக்கம் பரவிக் கொண்டிருந்த நாள் அது. எங்கும் தோரணங்கள், கொடிகள், ஊர்வலம், பிரசங்கங்கள் தான். ஆனல் இடையிடையே எதிர்ப்பு. ஒரு பக்கம் ஆதரவு, இன்னொரு பக்கம் மனக்கசப்பு.

"இப்படி ஏன் இவர் தலையிடவேண்டும்? வந்தது தானக வரட்டுமே," என்பார் சிலர். தானய் பழுக்காத கனியைத் தடியாலடித்தால் பழுக்குமா என்பார் மற்றுஞ் சிலர். விதவிதமாக எண்ணங்கள்; தீர்மானங்கள். ஆனல் ஓட ஆரம்பித்த சமுதாய சீர்திருத்தமென்ற சக்கரம் நிற்கவேயில்லை. இதைப் பெரும்பாலோர் கவனியாமலில்லை. "ஏதடா இது! பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்ததே" என்றவார்த்தையும் பிறந்தது. இரண்டொரு வற்புறுத்திப் பேசும் சேலம் நகர சபை வாக்காளர்கள் பகிரங்க மாகவே புதிதாய்த் தேர்ந் தெடுக்கப்பட்ட சேர்மன் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் காதில் விழும்படி சொன்னதும் உண்டு. எனவே சற்று அமைதி குறைந்த நாள் அது.

கல்யாண அழைப்பைக் கௌரவித்த சட்டைத் தலைப்பாகையுடன், தாம்பூலம்பெற ஆலால் கோட்டை ஜில்லா கோர்ட்டுக்கு முன் வண்டியிலிருந்து இறங்கின முனிசிபல் புது சேர்மனுக்கு, எதிர்கொண்டு மணப் பந்தலில் அமோகமாக வரவேற்பு அளித்தார்கள். விருந்து செய்து போகவும் வேண்டும் என்ற உண்மை அழைப்பை வந்தவர் அங்கீகரிக்கமுடியாது என்று மறுக்கத் தயங்கினர்.

போஜனம் அறுசுவையுடன் அவ்விசேஷ சம்பவத்தின் மேன்மையை விளக்கிக் காட்டிற்று. தம்பதிகளுக்கும் சம்பந்திகளுக்கும், உற்ருர் உறவினருக்கும் மிகவும் மனத்திருப்தி. இடையே நடந்த ஒரு ருசிகரமான சம்பாஷணையை யார் மனதில் வைத்துக்கொண்டிருப்பது? ஆனல் சேர்மன் மனதில் ஆணித்தரமாகப் பதிந்து போனதை யார் அறிய முடியும்?

"நல்ல கிணற்று ஜலம்! சுத்த ஜலம் தான்" என்ருர் வீட்டிலிருந்த பெரியார். போஜனத்தில் கூஜா எடுத்து தாகத்திற்கு நீர் கொடுத்துக் கொண்டே போன அப்பெரியார், கௌரவ விருந்தாளியண்டை வெள்ளிக் கூஜாவில் ஜலம் சேர்த்து நின்ருர்.

"ஆம், நீர் நன்ருயிருக்கிறது" என்ற அபிப்பிராயம் பெறவே நின்று கொண்டார் போலும். நின்ற மாதிரியில் ஒரு வெற்றித் தோற்றத்தைக் கண்டமுதல் விருந்தாளி சேர்மன் "ஆம், நன்ருயிருக்கிறது. இது எல்லா வீட்டிலும் இருந்தால் முனிசிபாலிடிக்குப் பெரும் லாபம், குழாய்த்தண்ணீருக்கு வீண் செலவு செய்திருக்கவேண்டாம்" என்ருர். பெரியவர் பன்னகை.

"ஆம். இங்கே யிருக்கும் இவ்வளவு பெயர்களுக்கும் குழாய் ஜலம் கொண்டுவந்து கொடுப்பது அசாத்தியம். மேலும் இவ்வளவு ஜலம் கிணறுகள் இல்லாத பொதுஜனங்களுக்கும் உபயோகமாகும்" என்று இன்னெரு வீரப்புன்னகையுடன் தீவிர தண்ணீர் தியாகத்தில் இறங்கினர் பெரியவர்.

அக்கிரகாரத்திலிருந்த முனிசிபாலிடி தண்ணீர்குழாயைக் காலையில் திறக்கவும், மாலையில் மூடுவதும் இரண்டு ஹரிஜன சிப்பந்திகளின் வேலை. அவர்கள் கையால் திறந்து வைத்த குழாய் நீர் பரிசுத்த மிழந்து ஆசாரத்திற்கு களங்கமேற்பட, கிணற்று ஜலத்தையே உபயோகிக்க ஏற்பாடாயிருந்ததை சேர்மனிடம் சொல்வார்களா? என்ன சொல்லியும் பயன்படவில்லையே. "வேணுமென்றே அக்கிரகாரத்தில் அவர்களை விட்டு குழாய் திருப்பும்படி உத்தரவு போட்ட சேர்மனிடத்தில் என்ன முறையீடு?" என்ற இப்பேர்பட்ட எண்ணங்களின் நிழல் விருந்தாளியின் மனத்தில் விழாமலில்லை. எல்லோரிடமும் உண்மைத்தோழனைகப் பேசிப் பரிந்து விசாரித்து சிரித்த முகத்துடனேயே வண்டியில் ஏறிச் சென்ருர் முனிசிபல் சேர்மன்.

போகும்போது பாதையில் எழுந்த சிந்தனைகளை அவரே அறிவார்! இதற்கு முதல் வாரம்தான் சில முக்கியஸ்தர்கள், பழங்கால பழக்கத்தினர், சமுதாய போக்கின்படியே நகரசபைத் தலைவரை இவ்விஷயமாக பேட்டி காண வந்தது ஞாபகத்திற்கு வந்தது.

வந்தவர்கள் பல காரணங்களை எடுத்து தங்கள் மனுவை நீட்டினர்கள். விதவிதமாக வாதித்தனர். ஆனல் சேர்மன் மனம் தளரவேயில்லை.

"நான் வேண்டுமென்று அவர்களை அக்கிரகாரத்திற்கு மாற்றினது என்ற உங்கள் அபிப்பிராயம் முற்றிலும்

தவறு. எனக்கு இது தெரியாது. இதில் சம்பந்தமுமில்லை. முனிசிபல் நீர் இலாகா என்ஜினியர் வேலையின் இயல்பாக ஏற்பட்ட ஒரு சம்பவம். இதில் எவருக்கும் ஒருவித கெட்ட எண்ணமுமில்லை மனப் பான்மையும் இல்லை. உங்களுக்குப் பிடிக்காவிடில் பொறுப்பான அதிகாரிக்கு முறையிடுவது நேர் வழி. இதில் நான் தலை இடுவதற்கில்லை'' என்று சொன்ன பதில் வந்தவர்களுக்கு திருப்தியளிக்கவில்லை என்று அவருக்கு நன்கு தெரியும். ஆனால் தான் தன் அதிகார தோரணையில் தலை யிடுவதற்கில்லை என்று நன்குணர்ந்தவர். இந்தச் சிக்கலில் என்ன ஏற்படுமோ வென்ற பிரச்னைக்கு மனம் ஒரு சமாதானத்தைத் தேடவில்லை என்று நிச்சயமாய் யார் சொல்லி முடியும்?

பெருவாரியாக பொது மக்கள் அங்கங்கே பொதியவைத்திருந்த குழாய்களில் (''வீட்டுக் கனக்ஷன் கொடுக்கவில்லை. இன்னும் சேல மக்கள் அச்சௌகரியத்தை யடைந்த பாடில்லை'') குடிப்பதற்குமட்டுமே உபயோகிப்பது சகஜமாயிருந்தது. குழந்தைகளும் சிறியவர்களுமே குடிப்பதற்கு அதை உபயோகித்து பழைய பழக்கங்களைக் கையாண்டு ஆசாரங்களில் ஊன்றி நின்ற குடும்பங்கள் கிணற்று ஜலத்தையே உபயோகித்தனர்.

எனவே, ''நான்கு நாளாய், என் தாயார் சாப்பிடவில்லை'' யென்றும் ''இந்த நீர் கலந்த பாத்திரங்களால் தெய்வ பூஜைக்குத் தடையாகு மானதால் இரண்டு நாள் தகப்பனார் பட்டினி'' என்றும் இன்னும் பல மாதிரியாக வந்து சேர்ந்த பழிச்சொல்கள் அநேகம். இவை பொறுட்படுத்தாது தன் போக்காய்ப் போய்க் கொண்டிருக்கும் நகர சபைத் தலைவர்மேல் சிலருக்குக் கோபமே. ஆனால் அவர்கள் சத்தியாக்கிரக முறையை கையாளவில்லை. அவ் வியக்கம் அப்பொழுது நாட்டில் தோன்றவில்லை. சிறுபான்மையோர் தலைவரிடம் அருவருப்பு காண்பித்தனர். ஆனால் அவர் அதைப் பொருட்படுத்தவில்லை, காரியத்திலே கண்ணுயிருந்தார் கொஞ்சம் நாள் சென்றதும் கிளர்ச்சியும் ஒருவாறு அடங்கிற்று.

''குழாய் திருப்புவர்களை மாற்றவேண்டுமென்று மனுக்கள் வந்து கொண்டிருக்கின்றன. நான் வேண்டுமென்று செய்யவில்லை. அக்கிரகாரம் வார்டில் வேலை செய்தவன் வேலையிலிருந்து எடுபட்டான். அடுத்த வார்டில் வேலை செய்பவர்களை இதையும் பார்க்க வேண்டுமென்று சொன்னேன். அதில் இவ்வளவு சிக்கல் வரும் என்று நான் எதிர்பார்க்கவில்லை; என்ன செய்வது'' என்றார் என்ஜினியர்.

''உம்மிஷ்டம்போல் செய்யலாம். இவர்களை இப்போது வேறு வார்டிற்கு மாற்றினால் அங்கிருந்து ஆக்ஷபணை வராது என்று யார் சொல்ல முடியும்'' என்றார் முனிசிபல் சேர்மன்.

என்ஜினியர் பதில் ஒன்றும் சொல்லாமல் தயங்கினார். ''குழாய் திறக்கும் கருவி மாத்திரம் அழுக்குப்படியாமல் சுத்தமாய் வைத்திருக்கும்படி செய்தால்போதும்.''

''ஆம், குழாய் சாவி மாத்திரமில்லை. அவர்களும் சுத்தமாயிருக்கும்படி எச்சரிக்கையிட்டிருக்கிறேன்.''

''ஆமாம், இவர்கள் முதலில் காலையிலேயே உடம்பு குளித்துவிட்டுத்தான் வேலைக்கு வருகிறார்கள் என்று தெரிகிறது. பாவம்! தாழ்த்தப் பட்டவர்கள், எவ்வளவு தாழ்மையாய் நடந்து கொள்கிறார்கள்.''

அன்று காலை முனிசிபல் ஆபீசில் நடந்த சம்பாஷணையை அங்கிருந்தவர்கள் எல்லோரும் கேட்டார்கள். சிறிது நேரத்திற் கெல்லாம் சேலம், முனிசிபல் ட்ராவலர்ஸ் பங்களா (பிரயாணிகள் தங்கும் வசதி) வேலை பார்க்கும் மேட்டி (அவனும் ஒரு ஹரிஜன்) நீண்டதொரு நோட் புத்தகத்தை எடுத்து ''சாமி!'' என்று கூவிக் கொண்டு ஆபீஸ்முன் நின்றான். வாரம் ஒரு தடவை அவன் அப்புத்தகத்தை எடுத்துக்கொண்டு கணக்குப் பதிய வைக்க முனிசிபல் ஆபீசுக்கு வருவது வழக்கம். ஆபீசுக்குள் வரவே மாட்டான். வெளியிலிருந்துகொண்டே விஷயத்தைச் சொல்லி விடுவான். கணக்கு ஆபீசில் ரிஜிஸ்டர் ஆனதும் அவன் போய்விடுவான்.

இவன் மரியாதையாய் நடந்துகொண்டதையும் தன் தாழ்மைத் தனத்தை ஒட்டி வேலைத் திறமையைக் காட்டிக் கொண்டதையும் கவனித்த முனிசிபல் சேர்மன், அவனை ஆபீசுக்குள் வரும்படி அழைத்தார். அவன் மறுத்து விட்டான்.

''எங்களுக்கு எதுக்குங்க? நானும் நீங்களும் சரியா? தர்ம துரை எனக்கு வேலை கொடுத்து ஏழையின் பிள்ளை குட்டியேக் கர்ப்பாத்திரீங்க. அது போதுங்க'' என்று சொல்லிவிட்டான். தீண்டாமை விலக்கின் விளைவு தான் என்னே! என்று அன்று நடந்த சம்பவம் சுட்டிக்காட்டிற்று. உண்மை வைஷ்ணவன் கடவுளின் எளியரான அடியார்க்கு சேவை புரிவதே நேர்வழியான கைங்கரியம் என்று வற்புறுத்திற்று. ஹரிஜன்சேவையே உண்மையான சமுதாய சீர்திருத்தத்திற்கு அடிப்படையான திட்டம் என்று அன்று ராஜாஜியின் மனதில் எழுந்த தீர்மானம் எவ்வாறு பின்னர் வாழ்க்கையில் நிறைவேறியது என்பது சரித்திர பூர்வமான அனுபவம்.

# சக்கரவர்த்தி

**"புஷ்யன்"**

இன்று சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் உண்மையில் சக்கரவர்த்தி யாகிவிட்டார். இது நாம் எல்லோரும் சாதாரணமாக எதிர்பார்த்தது தான். ராஜாஜி கவர்னர் ஜனரலாக மட்டுமல்ல, இந்தியக் குடியரசின் முதல் தலைவராகவும் வருவார் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

சந்திரனையும் சூரியனையும் கிரகணம் பிடிக்கிறது. அது என்றும் சாஸ்வதமில்லை. சில நிமிஷ நேரம் அல்லது சில மணி நேரம். அது போல் ராஜாஜியையும் ஒரு காலத்தில் கிரகணம் பிடித்திருந்தது. எப்பேர்ப்பட்ட எதிர்ப்பு. அப்பா! யாருக்கும் அப்பேர்ப்பட்ட எதிர்ப்பைக் கண்டிருக்க முடியாது. பேசப்போன இடத்திலெல்லாம் சரமாரியான கேள்விகள்; கலாட்டா; செருப்பை வீசுவது போன்ற எவ்வளவோ நடந்தன. எதற்கும் அசையாமலைபோல் தன் கொள்கையை வலியுறுத்தினர், தவறு செய்யும் குழந்தையை தகப்பனார் செல்லமாய் சொல்லித் திருத்துவது போல்.

சிறைக்குச் செல்ல பயந்தார் என்றார்கள் சிறையை தன் வீட்டுக்கும் மேலாகப் பாவிக்கும் ராஜாஜியை. பதவி மோகம் கொண்டவர் என்றனர், ஜனங்களுக்கு வரும் அபாயத்தைத் தடுத்து நன்மை செய்ய வந்த ராஜாஜியை.

இருந்தாலும் நாட்டின் நிலைமை உணர்ந்து எது செய்தால் தீமை வராது, ஜனங்கள் சுபிட்சமாய் வாழ முடியும் என்று தீர்க்க திருஷ்டியுடன் தீர்மானித்துத் தன் வழி திருப்ப முயன்றார், தலைவர்களையும், ஜனங்களையும். யாரும்—ஒரு சிலர் தவிர—பின் பற்ற வில்லை. அதற்கஞ்ச வில்லை. நட்டாற்றில் தனியனாய் நிற்கிறோமே என்று சிறிதும் கவலை கொள்ள வில்லை. தன் கொள்கையையே வலியுறுத்தினர். அன்று அதை யாரும் ஏற்கவில்லை.

இன்று எல்லாம் உணர்கின்றனர். அன்று எந்தப் பிரிவினையை எதிர்த்தார்களோ, அதே பிரிவினை இன்று நடந்து விட்டது. அன்று அது நடந்திருந்தால் இன்று ஹிந்துவும், முஸ்லீமும் ஒருவனை யொருவன் கொலைப் பார்வையுடன் பார்க்க மாட்டான். தோளோடு தோள் கொடுத்து வாழ்ந்து வந்திருப்போம் நண்பர்களாய்.

"குழந்தை கேட்பதை மறுத்தால் அதன் பிடிவாதம் மேலும் மேலும் அதிகமாகி தன் சாதனையை விடுவதில்லை. அதுபோல் நாம் 'பாகிஸ்தானு, நாட்டை பிளப்பதா, முடியாது' என்று சொன்னால் இதில் ஏதோ சூது இருக்கிறது. நாட்டை பிளப்பதால் ஹிந்துக்களுக்கு ஏதோ நஷ்டம் இருக்கிறது. அதற்காக சுய நலத்துக்காக இப்படிச் சொல்கிறார்கள் என்று நினைத்து பாகிஸ்தான், பாகிஸ்தான் என்று மேலும் பிடிவாதம் அதிகமாகப் பிடிப்பார்கள். பிறகு விபரீதத்தில் வரும்," என்னும் பொருள் பட முன்னமே சொன்னார். திருப்பித் திருப்பிச் சொன்னார். அன்று அது செவிடன் காதில் ஊதிய சங்காயிற்று. இன்று அவருடைய தீர்க்க திருஷ்டி சந்தேகமற தெரிந்து விட்டது.

எல்லா தலைவர்களும் இன்று தவறை உணர்ந்திருக்கின்றனர். அதன் பயன் ராஜாஜி பெரிய ஞானி, மதிமந்திரி என்று உலகம் முழுதும் உணர்ந்தது. ராஜாஜியின் வாக்கு இன்று வேத வாக்காக இருக்கிறது.

தொண்டே தம் கர்மம் என்று கொண்ட ராஜாஜியை துரதிர்ஷ்ட வசமாகத் தமிழர்கள் தூற்றினர். பதவி மோகம் கொண்டவர்கள் அவர் வந்தால் தம் ஆசை நிறைவேறாதே என்ற பயத்தால் அவர் வராமல் இருக்க எல்லா சூழ்ச்சிகளும் செய்தனர். மொத்தத்தில் அவருடைய சேவையை தமிழ் நாடு இழக்கும்படி செய்து விட்டார்கள்.

ஓடிப்போனவனுக்கு ஒன்பதாம் மடத்தில் ராஜா என்று பழமொழி. அதுபோல் இங்கிருந்து அறியாமல் எறிந்துவிடப் பட்ட மாணிக்கத்தை பெருமையுடன் எடுத்து பத்திரப் படுத்தி அதற்குக் கொடுக்க வேண்டிய உன்னத ஸ்தானத்தைக் கொடுத்தனர். அதன் விலையை யறியாது வீசிவிட்ட தமிழர்கள் மீது அனுதாபம் கொண்டனர். தமிழர்களும் பிறகு அடடா! அது மாணிக்கமா, கண்ணாடி என்று நினைத்து விட்டோமே என்று தவறை உணர்ந்தனர். என்ன பயன்?

இப்படியெல்லாம் தம்மைத் தமிழர்கள் வெறுத்த போதிலும் அவர் தமிழர்களின் பேரிலும், தமிழ் நாட்டின் பேரிலும் கோபமடைய வில்லை. அதற்கு மாறாக இன்னும் அதிக அன்பு பூண்டிருக்கிறார். இது தான் பெரியோர்களின் விசேஷ தன்மை. தம்மை வெறுத்தோரை மேலும் பரிபூர்ணமாக நேசித்தல். வங்காளத்தி லிருந்த போதும், டெல்லியி லிருந்த போதும் தமிழ் நாட்டைப் பற்றி நினைக்காத நேரமே இல்லை. தன் தொல்லைகளை யெல்லாம் பற்றிக்

கூட கவலைப் படாமல் சதா தமிழ் நாட்டின் நிலையைக் கவனித்துக் கொண்டே இருக்கிறார்.

நன்மை செய்ய காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்க வேண்டியதில்லை. கிடைக்கும் சந்தர்ப்பங்களில் எல்லாம் உடனே சீர்திருத்தம் செய்ய வேண்டியது என்பதற்கு எடுத்துக் காட்டு ராஜாஜி.

இடைக்கால சர்க்காரில் இருந்த சிறு காலத்தில் அனேகப் பொருள்களுக்கு லைசென்ஸ், கட்டுப்பாடு எல்லாம் எடுத்து விட்டு வியாபாரத்தை அதிகப்படுத்தினர். ஒரே சோகக் காட்சியாகக் காட்சி கொடுத்து வந்த கல்கத்தா நகரத்தையும், மேற்கு வங்காளத்தையும் குதூகலத்துடன் வாழச் செய்தார். அடிக்கடி வங்காளத்தில் பெரிய பெரிய பணமூட்டைகளுக்கு லட்சம் லட்சமாக அபராதம் விதிக்கப் பட்டதாக பத்திரிகைகளில் பார்த்துக் கொண்டு வருகிறோம். ராஜாஜி கவர்னர் ஜனரலாக இதற்கு முன் பதினைந்து தினங்கள் வேலை பார்த்தபோது யாரும் எதிர்பார்க்க முடியாத ஒரு காரியத்தைச் செய்தார். கவர்னர்-ஜெனரலின் குடும்பம் மட்டும் சினிமா பார்ப்பதற்கென்று அமைக்கப்பட்ட கவர்னர்-ஜனரலின் மாளிகையில் உள்ள தியேட்டரில் குமாஸ்தாக்கள், கீழ்த்தர சிப்பந்திகள் எல்லோரையும் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு சினிமா பார்த்தார். இந்த அற்புதத்தைப் பற்றி என்னவென்று சொல்வது.

ராஜாஜியின் பேச்சிலோ, கொள்கையிலோ, சந்தேகமோ, புரியாத வழவழத்தனமோ இருக்க முடியாது. வெட்டொன்று துண்டிரண்டாக—ஆனால் புன்சிரிப்புடன்—சொல்லி விடுவார். நன்றாக விளங்க வைப்பதில் அவரைப் போல் வேறொருவர் இல்லை. மூடனும் நன்கு புரிந்து கொள்ளும்படி நன்கு விளக்கிச் சொல்லும் அபார வன்மை அவரிடம் தான் நாம் இன்று காண முடியும். தன்னைக் குப்புறத் தள்ளி பதவி மோகம் கொண்டு மந்திரி சபையைக் கைப்பற்ற எண்ணியவர்களுக்கு அன்றொரு நாள் கோகலே ஹாலில் சொன்னதை மறக்கமுடியாது.

“வாழை மரம் இருக்கிறது. அதில் வாழை இலைகள் ஒன்றொன்றாகத் தோன்றுகிறது. முதலில் வாழை இலை சுருண்டு இளம் தளிராக இருக்கிறது. நாளாக ஆக இலை முற்றியதும் கொஞ்சம் கொஞ்சமாக விரித்துக் கொள்கிறது. புதிதாக வெளியே வரும் வாழை இலைக் குருத்து முதலில் அதற்கு முன் வெளி வந்த வாழை யிலையின் நடு நரம்புடன் ஒட்டிக்கொண்டிருக்கும். அந்தக் குருத்து ‘இதோ இப்போதே விரித்துக் கொண்டு உன்னைப்போல் ஆகிறேன்’’ என்று முதிர்ந்த இலையைப் பார்த்துச் சொல்கிறது. அதற்கு அந்த முதிர்ந்த இலை என்ன பதில் சொல்கிறது தெரியுமா?

“குருத்திலேயே அவசரப்படாதே, இளம் தளிர் நீ, இப்போதே ஆத்திரப்பட்டு விரித்துக் கொண்டாயானால் காற்றையும், உஷ்ணத்தையும் தாளாது சீக்கிரம் வாடி கிழிந்து விடுவாய். இன்னும் நாளாகி முதிர்ந்த பிறகு விரித்துக்கொண்டால் அப்போது உன்னால் சூறுவளிக் காற்றையும் சூரியனின் வெப்பத்தையும் நன்றாக தாங்க முடியும்.’’

எவ்வளவு அற்புதமாக இருக்கிறது இந்த உதாரணம். இது ஒன்றுதானா? அவர் பேச ஆரம்பித்தால் எல்லாம் இப்படிப் பட்டவைகளாக கணக்கின்றி வந்து கொண்டேயிருக்கும்.

வங்காள கவர்னரான பிறகு எட்டையபுர விழாவுக்கு வந்தபோது சென்னை கார்போரேஷன் வரவேற்றபோது “கையிலிருக்கும் குடத்தைப் போட்டு உடைக்கு முன், இதை உடைக்கிறோமே, உடைத்தால் இதை விட வேறு நல்ல குடம் கிடைக்குமா’’ என்று சிறிது யோசிக்க வேண்டும் என்று சொன்னதைக் கேட்டு எந்த தமிழனும் வெட்கத்தால் தலை குனியாமலிருந்திருக்க முடியாது.

காந்திஜிக்குப் பிறகு ஞானி, தீர்க்கதரிசி, ராஜாஜிதான் என்பதை யாரும் மறுக்கமுடியாது. ராஜாஜி பதவியிலிருந்த போதாகட்டும், மற்றும் எந்த பொது வாழ்விலும் அவர் கவனக்குறைவாகவோ, வெற்றியில்லாமலோ ஒரு காரியம் செய்ததில்லை. அவர் தலையிட்ட காரியம், ஆரம்பித்த காரியம் எல்லாம் பொன்னாகத்தான் மிளிர்ந்து வருகின்றன. அவர் இருக்குமிடமே ஒரு அலாதியான இன்பத்துடன் காட்சி தருகின்றது. எவ்வளவு கடினமான காரியமேனும் சிறிதும் கவலைப் படாமல், பயப்படாமல் ஏற்றுக் கொள்ளும் பான்மை அவரிடம் இருக்கிறது. அதை வெற்றியுடன் தீர்த்து விடும் ஆற்றல் இருக்கிறது.

ஹைதராபாத் பிரச்னை, காஷ்மீர் பிரச்னை எல்லாம் காத்துக் கொண்டிருக்கின்றன ராஜாஜியை வரவேற்க. அவைகளுக்கு சரியான பதிலைத் தந்து இந்தியாவை காந்திஜியின் கனவான ராமராஜ்யத்தை ஸ்தாபித்து விடுவார் என்று நம்புவோம்.

# நாட்டியக் கலை

இராஜகோபாலாச்சாரி

சென்ற நூற்றாண்டின் இறுதியில் நான் சிறுவனாக இருந்தபோது, சமூக சீர்திருத்த வாதிகள் தங்களுக்கு பிடிக்காததை ஒழிக்க மூர்த்தன்யமாக வேலை செய்து வந்தார்கள். அவர்கள் நடத்திய பிரசாரத்தின் பலனாக பரத நாட்டியமே அடியோடு அழியும் பயங்கர நிலையில் இருந்தது. உலக சரித்திரத்திலேயே தோல்விகளே, முன்னேற்றத்துக்கும் பண்பின் பூரண வெற்றிக்கும் காரணமாக சிற்சில சமயங்கள் விளங்கி இருக்கின்றன இந்த சீர்திருத்த வாதிகளின் தோல்விகள் அணையா பொறிகள் சிலவற்றை விட்டுச் சென்றன இந்த பொறிக் கூட்டத்திலே பூத்த வெண் ஜ்வாலைதான் பரதகலை. தப்பிப் பிழைத்த இந்தக் கலை இன்று தனி ஆட்சி புரிகிறது. நாம் இதற்கு இழைத்த கொடுமைக்கு கடவுள் தான் நம்மைக் காப்பாற்ற வேண்டும்.

இந்தியா எங்கும் புரட்சி ஏற்படுத்தி விட்டது பரத நாட்டியம். உண்பதும் உறங்குவதும் தவிர, மற்ற இன்பங்களும் வாழ்க்கையில் மலிந்து கிடக்கின்றன என்ற உண்மையை பாமரனும் உணரும்படி செய்து விட்டது இந்த மகோந்நதக் கலை. அங்க அசைவின் அழகும், நெளியும் பரவசமும் நாட்டியக் கலையின் ஜீவ நாடிகள். இந்த ஜாஜ்வல்யத்துக்கு அப்பால், இருண்ட கண்ணாடியின் மூலம் பிரபஞ்சத்தின் ரகசியத்தை பார்த்தும் உணர முடியாத நிலையில் நம்மைத் தத்தளிக்கச் செய்கிறது பரத நாட்டியத்தின் பரந்த அம்சங்கள் பல.



நடன ராணி மிருணாளினி ஸராபாய்

இந்தக் கலையில் பூரணத்வம் அடைய விரும்பும் மேதைகள் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். சூடுதரும் நெருப்பு சுட்டு விடும்; எரித்துவிடும். எல்லா இன்பங்களும் அக்னியைப் போன்றன. சமுதாய கட்டுப்பாட்டிலேதான் நிர்ப்பயம் ஏற்படும். கச்சேரியில் முழங்குவது மட்டுமின்றி, வீடுதோறும் பெண்கள் பயிலும் பரவசக்கலையாக பரதநாட்டியம் போற்றப்பட்டுவருவதுரொம்பவும் வரவேற்கத்தக்கது.






'கலவரத்தை வளர்க்காதீர்கள். ஒன்றுமறியாத பேதை ஜனங்களைப் பலியிடாதீர்கள். ஒவ்வொரு ஆத்மாவும் வருங்கால இந்தியாவின் ஒவ்வொரு தூண்' என்று தேச பக்தர்கள் அலறுவதை பம்பாய் மக்கள் கவனித்தார்களா? இல்லை. ரத்த வெறி பிடித்த நாசகார கும்பல் நகரைக் கொலை களமாக்கிற்று. இந்த ரத்த ஆறில் மிதந்து தப்பிய ஜெயராமன், அஹ்மத், ஒரு வெள்ளைக்கார டாமி, ஆகிய மூவரும் கட்டழகி லீலூ வீட்டில் சரண் புகுகின்றனர். அழகி மூவர் உள்ளங்களிலும் ப்ரேமைப் புயலை எழுப்புகிறாள்......................................

## அத்தியாயம் 4.

"வெள்ளை நிறத்தைக் கண்டால்பதறி
வெருவலை யொழித்தாயோ?......

(பாரதியார்)

ஆலைக்கு இடம் வாங்க வெள்ளையன் வில்லியம்ஸ் சின்னக்குளத்துக்கு வந்திருக்கிறான் என்பதையும், தனக்கு ஒரு சாண் மண்கூட கிடைக்காத வாறு, ஊர் நிலங்கள் அனைத்தையும் ஆக்ரமித்துக் கொண்டிருந்த அலிபாவாவின் பயிர் நிலங்களையே அவன் தேர்ந்தெடுத் திருக்கிறான் என்பதையும் அறிந்த போது ராய் சாகிப் சிதம்பரம் பிள்ளை அடைந்த களிப்பை விவரிக்கவே முடியாது.

மனிதத் தன்மையில் மிகவும் கொடூரமானது, பிறர் வாழக் காண சகியாத தன்மை. ராய்சாகிப் முதலில் தன்வரையில் ஓரளவு விளை பூமியை வாங்கிவிட வேண்டுமென்று தான் வழி செய்து வந்தார். ஆனால், அது சாத்தியமாவதற்கு இன்னும் பலகாலம் பிடிக்கும் என்று உணர்ந்ததும், அவைகளை அநுபவித்துவந்த அலிபாவாவை சற்று கைதாழ்த்தி விடவேண்டுமென்ற தூர் நினைவே அவரிடம் தோன்றிற்று. அலிபாவாவின் கை தாழ்ந்தது என்றால், தன் மதிப்பு கிராமத்தில் தானாக உயர்ந்து விடும் என்பது அவர் துணிவு.

'பஞ்சாலையை நிர்மாணிக்க வில்லியம்ஸ் பொறுக்கியிருக்கும் இடத்தை எப்படியும் வாங்கி விட வேண்டுமென்று மூட்டிவிட்டு விட்டால், அலிபாவாவின் ஆட்சியி லிருக்கும் வயற்களில் பாதிக்கு மேலாக பிடுங்கப்பட்டுவிடும். பாதி நிலச்சுவான்கள் அவன் பிடியினின்று விடுபட்டு விடுவார்கள். பிறகு அவர்களை தான் கைக்குள் போட்டுக் கொள்ளு

வது, சிரமமானதல்ல; அவ்வாறே, வில்லியம்ஸ், ரோலண்டு பாதிரி இவ்விருவரின் உதவிகொண்டு மற்றைய நிலச்சுவான்களைத் தங்கள் நிலங்களையும் விடுதலை செய்து கொள்ளுமாறு செய்துவிட வேண்டும். அப்புறம் துலுக்கன் சின்னக்குளத்தை விட்டு கிளம்புவதைத் தவிர, வேறு வழியேது?' என்றிவ்வாறு மனோராஜ்யமிட்டார் அவர்.

வில்லியம்ஸ் அவர் ஆலோசனையை வேறு விதமாக எண்ணி, மனம் தளர்ந்து விட்டான்.

இரண்டொரு நாட்களுக்கு முன்பே, அவன் மில்லுக்கு இடம் தேடிக்கொண்டு சின்னக்குளத்துக்கு வந்தான். அப்பொழுதுதான் அவன் இந்த இடத்தை தேர்ந்து எடுத்தான். அதை பேசி முடித்துத் தரும்படி அண்ணு பாதிரியிடம் வந்து கேட்டுக்கொண்டான். ஆனால், அவர் கூறிய பதில் அவனை திகைப்பும் ஏமாற்றமும் அடைய வைத்தது. வில்லியம்ஸ் தேர்ந்தெடுத்திருக்கும் பூமி யாருடையது என்பது பாதிரியாருக்குத் தெரியாது. எனினும், அது பயிரேற்றப்பட்ட பூமி என்றறிந்ததும் அவர் சொன்னார்: "தம்பி வில்லியம்ஸ், இந்திய மக்கள் விவசாயத்தைக் கொண்டு பிழைப்பவர்கள் என்பது உனக்குத் தெரியாதா? அதிலும் கிராமத்து மக்கள் விளை பூமியை தெய்வமென மதிப்பவர்கள். ஆகவே அப்பூமியை தரிசாக்கும் எந்த உபயோகத்துக்கும் அவர்கள் தர மாட்டார்கள். வீணில், அதன் சொந்தக்காரரைத் தேடிக் கொண்டு போவதில் பலன் இல்லை. காலத்தை விரயம் செய்யாமல், வேறு தரிசு இடமாக ஏதாவது பார்" என்றார்.

வில்லியம்ஸுக்கு பாதிரியின்கூற்றில் நம்பிக்கை ஏற்படவில்லை. 'கொஞ்சம் கூடுதலாக விலை அல்லது வாடகை கொடுத்தால், ஏன் அந்நிலத்தை வாங்க முடியாது?' என்றே அவன் நினைத்தான்.

ஆகவே அவரிடம் வாக்காடாமல், தானே சின்னக்குளத்துக்கு புறப்பட்டு விட்டான். யாராவது ஆங்கிலம் தெரிந்தவர்கள் மூலம், நிலத்தின் சொந்தக்காரரைக் கண்டு எல்லாவற்றையும் பேசி முடித்துவிடும் தீர்மானத்தோடு இங்கு வந்தான். வந்த இடத்தில் எதிர்பாராத வாறு காயமுற்றது கூட அவனுக்கு பெரிதாகப் படவில்லை. ஆங்கிலம் அறிந்தவராகவும், நாகரீக பழக்க வழக்கங்கள் உடையவராகவும் அறிமுகமான ராய்சாகிப்பின் மூலம் வந்த காரியத்தை உடனே முடித்துக்கொண்டு விடவேண்டுமென்று அவன் விரும்பினான். ஆனால் அப்பேச்சு தன்னிடமிருந்து வந்ததுமே, அவர் பேச்சு மூச்சற்று விட்டது, அவனுக்கு தன் அண்ணாவின் சொற்களை நினைவுக்குக் கொண்டு வந்து, தளர்வடையச் செய்தது.

ஒருகால், அந்நிலம் அவருடையதாகவே இருக்குமோ? அதை கைமாற்ற மனமில்லாது இவ்வாறு தயங்குகிறாரோ வென்று கூட அவன் நினைத்தான்! அச் சந்தேகத்தை முதலில் தெளிவு செய்து கொள்ள எண்ணி, "என்ன மிஸ்டர் ராய்சாகிப்? ஏன் பதில் சொல்ல மாட்டேன் என்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"ஆம்; என்னை பேச முடியாமல் செய்து விட்டது நீங்கள் கொண்டு வந்திருக்கும் பிரேரணை. கர்னல் வில்லியம்ஸ், உங்களுக்கு இந்தியர் விளை பூமியிடம் கொண்டிருக்கும் மதிப்பு தெரிந்திராது. பொதுவாக வெள்ளைக்காரர் எவருமே அதைப்பற்றி அறிந்திருக்கமாட்டார்கள். பல தலைமுறைகளாக அடிமை வாழ்வு வாழ்ந்து வரும், இம்மக்களுக்கு தங்கள் பூமியிடம் அப்படி யென்ன பாசம் இருந்துவிடப் போகிறது என்றுதான் நீங்கள் நினைத்திருப்பீர்கள். ஆனால், உங்களிடம் திறந்து சொல்கிறேன்; நகரத்து மக்கள் எப்படி யிருப்பினும், இந்த கிராமத்து மக்களுக்கு தங்கள் மண்ணிடம் இருக்கும் பற்றுதலை அளவிடவே முடியாது. அதிலும் அம்மண் விவசாயப் பூமியாக இருந்து விட்டால், தலை போகும் நிர்ப்பந்தம் ஏற்பட்டாலும் கூட அதை கைமாற்ற அவர்கள் மனம் ஒப்பமாட்டார்கள். இது என் சொந்த அநுபவம்."

"நீங்கள் கூறுவது உண்மையே, ராய் சாகிப். பாதிரி அண்ணு கூட இதை எனக்கு ஏற்கனவே அறிவித்திருக்கிறார். ஆயினும், இந்த சுற்றுப் படுகையில், இதைப் போன்ற வசதியான இடம் வேறு எங்கும் அகப்பட வில்லையே. ஆகவே எவ்விதமும் இந்த நிலங்களை நான் வாங்கித்தான் ஆக வேண்டும். சொல்லுங்கள், இவைகளின் சொந்தக்காரர் யார் என்று?"

"என்னை மன்னித்துக் கொள்ளுங்கள் கர்னல். உங்களுக்கு உதவ வேண்டு மென்ற ஆர்வம் எனக்கு நிறைய இருக்கிறது. நிலங்கள் என்னுடையவையாயிருந்தால் மறு பேச்சின்றி உங்களுக்கு கிரயப் பத்திரம் எழுதிக் கொடுத்திருப்பேன்; அல்லது உங்களுக்கு கொடுக்க தயங்கி யிருக்க மாட்டேன். ஆனால், சொல்லிக் கொள்ள வெட்கமாயிருக்கிறது. கர்னல்; நான் இம் மண்ணில் பிறந்தவனானாலும், இவ்வூர் பட்டாவில் ஒரு அடி பூமி கூட என் பெயரில் இருக்க வில்லை. கடந்த ஒன்றரை வருஷங்களாக நான் எவ்வளவோ முயன்று பார்த்து விட்டேன். பலன் இல்லை. விவசாயத்துக்காகவே நிலம் வாங்க விரும்பிய என் பாடே அப்படி ஆயிற்று என்றால், உங்கள் மில்லுக்கு எப்படி இவ் விளை பூமி கிடைக்கப் போகிறது?"

வில்லியம்ஸுக்கு இன்னும் நம்பிக்கை ஏற்பட வில்லை. அவன் கேட்டான்: "ஆனால் ராய் சாகிப், அவர்கள் கேட்கும் விலையைக் கொடுப்பதாயிருந்தால் கூடவா நிலத்தை விற்க இசைய மாட்டார்கள் என்கிறீர்கள்?"

ராய் சாகிப் வேண்டு மென்றே நிலவரத்தை நேரே சொல்லாது பலத்த அஸ்திவாரம் எழுப்பி வந்தார். அவர் மெல்லிய புன்சிரிப்புடன் சொன்னார்: "விலை பிரமாதமானதல்ல, வில்லியம்ஸ், இப்பட்டிக் காட்டாருக்கு. இவர்கள் குருட்டுத்தனமான பிடிவாதம் உடையவர்கள். கூடுதல் விலைக்கு ஆசைப்படுபவர்கள் என்றால், என்றைக்கோ நான் இந்நிலங்களின் சொந்தக்காரனாகி யிருக்கமாட்டேனா? அவ்வளவேன்? அவைகளை குத்தகைக்கு தரக்கூட முடியாதென்றார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்."

அவர் சொல்வது உண்மையாக இருக்குமா என்று வில்லியம்ஸ் சந்தேகித்தான். "அப்படியானால் என் மில்லுக்கு வேண்டிய பூமியை இவ்வூரில் அடைய முடியாதென்றா சொல்லு

கிறீர்கள்!" என்று நம்பிக்கை இழந்தவனுய்க் கேட்டான் அவன்.

"ஆம்; கர்னல். எடுத்த எடுப்பில் உங்கள் முயற்சிக்கு முட்டுக்கட்டை போட நேர்ந்ததற்கு விசனிக்கிறேன். பாவம்; அந்த சின்னச் சின்ன நிலச்சுவான்களை குறை சொல்வதிலும் பயன் இல்லை. நிலங்கள் அவர்கள் சுவாதீனத்தில் இருந்தால்தானே, அவர்கள் விற்கவோ குத்தகைக்கு விடவோ முடியும்?"

"என்ன வேடிக்கை செய்கிறீர்கள், ராய் சாகிப்? நிலங்கள் அதன் அதன் சொந்தக்காரர்களின் சுவாதீனத்தில் இல்லாது வேறு யார் சுவாதீனத்தில் இருக்க முடியும்?"

"அப்படிக் கேளுங்கள்; அதுதான் வேடிக்கை இவ்வூரில். சுமார் முன்னூறு நிலச் சுவான்கள் இவ்வூர் விளை பூமியின் சொந்தக் காரர்களா யிருக்கிறூர்கள். ஆயினும் அவர்களில் ஒருவராவது அவைகளில் ஒரு பகுதியை யேனும் விற்கவோ, வாங்கவோ முடியாது. ஏனெனில், நிலங்கள் அவர்களுடையதே யெனினும், அவைகளை ஆக்குவதோ, அழிப்பதோ, விற்பதோ, வாடகைக்கு விடுவதோ, எல்லாம் ஒரு தனி மனிதனின் கைக்குள் அடங்கி யிருக்கிறது."

"என்ன? ஒரே ஒரு மனிதனிடமா அத்தனை நிலங்களின் உரிமையும் இருக்கிறது? ஆச்சரியமாயிருக்கிறதே, நீங்கள் சொல்லுவது. அவன் யார் ராய் சாகிப்?"

"அவன் யார் என்பதை தெரிந்து கொண்டு என்ன செய்யப் போகிறீர்கள்? என் பேச்சை சற்று கவனமாகக் கேளுங்கள். இந்த சின்னக் குளத்து மண்ணுக்காக நான் ஏற்கனவே முயன்று தோல்வியுற்றிருக்கிறேன். ஆகவே நீங்களும் அம் முயற்சியில் உங்கள் பொழுதை வீணுக்க வேண்டாம். வேண்டுமாளுல், எனக்கு சொந்த மான பருத்திக் காடு ஒன்று சமீபத்தில் இருக்கிறது; அந்த இடத்தை வந்து பாருங்கள். தண்ணீர் வசதி யற்ற இடமே யென்று தான் ஆலோசிக்கிறேன். இல்லாவிட்டால், மில்லுக்கு ஏற்ற விசாலமான பூமிதான் அது. இதர சவுகரியங்களெல்லாம் இருக்கின்றன. நல்ல ரஸ்தா இருக்கிறது. சுற்றிலும் பருத்தி விளையும் பூமி நிறைய இருக்கிறது. மற்றும் எல்லா வசதிகளும் இருக்கின்றன. தண்ணீர் கஷ்டத்தை தவிர்க்க பெரிய கிணறுகளாக இரண்டு மூன்று தோண்டி விட்டால், வேறு கவலையே இல்லை. கர்னல் வில்லியம்ஸ், நீங்கள் மில் தொடங்குவதில் கொண்டி ருக்கும் ஆர்வமும், உங்கள் சகோதரர் ரோலண்டு பாதிரியின் நற்குணமும், மற்றும் ஆங்கிலேயரிடம் நான் கொண்டிருக்கும் பிரீதியும் காரணமாகவே, எனக்கு இருக்கும் சிறிது பூமியையும் உங்களுக்கு விட்டுக் கொடுக்க முன் வந்திருக்கிறேன், ஊருக்குச் சென்று ஆற அமர ஆலோசித்து முடிவு சொல்லுங்கள். வீணில் எட்டாக் கனிக்கு கொட்டாவி விடுவதில் பலன் ஏற்படாது."

விலை பெருத பருத்திக் காடு எதையோ வாங்கி விட்டு, அதை தன் தலையில் வைத்துக் கட்ட, ராய் சாகிப் இவ்வூர் நிலங்கள் தனக்கு கிடைக்காது என்று சொல்லுகிறூரென்றே வில்லியம்ஸ் அப்பொழுது நினைத்தான். ஆயினும் கேட்டான்: "உங்கள் உதவிக்கு நன்றி செலுத்துகிறேன், ராய் சாகிப். தண்ணீர் வசதி யில்லாத இடத்தில் மில்லை ஆரம்பிப்பது ஆலோசனைக்குரிய விஷயம் என்பதை நீங்கள் அறிந்து தானிருப்பீர்கள். கிணறுகளை நம்பி ஆலையை ஓட்டுவது, சில சமயம் வேனிற்காலத்தில், அதை மூடும்படி செய்துவிட்டாலும் செய்து விடும். நல்ல இடம் கைக்குள் இருக்கும் போது எதற்காக அத்தகைய ஆபத்தான நிலையை எதிர்கொள்ள வேண்டும்? ராய் சாகிப், இந்த இடம் எனக்கு கிடைக்காது என்று நீங்கள் சொல்லுவதை நான் ஆமோதிக்க மாட்டேன். இந்நாட்டை ஆண்டவர்கள் என்ற முறையில் எங்களுக்கு கிட்டும் விசேஷச் சலுகைகளைப் பயன்படுத்தி இவ்விடத்தையே வாங்கி விடலாம் என்ற நம்பிக்கை எனக்கு உறுதியாக இருக்கிறது. மேலும் என் அண்ணுவுக்கு இங்கு இருக்கும் செல்வாக்கு கூடவா, இந்த பூமியை எனக்கு கிடைக்கச் செய்யப் பயன்படாது என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? முதலில் இவை யாரிடம் சிக்கி யிருக்கின்றன என்பதைச் சொல்லுங்கள். பிறகு பாருங்கள்; எவ்வித சிரமமும் இன்றி எனக்கு தேவையான இடத்தை வாங்கி விடுகிறேனு, இல்லையா, என்று".

"உங்களுக்கு வெற்றி கிட்டப் பிரார்த்திக்கிறேன், கர்னல். ஆனுல், நான் குறிப்பிடும் மனிதன், உங்கள் அண்ணுவின் செல்வாக்குக்கோ, அல்லது வேறு அதிகாரிகளின் அமல்களுக்கோ பயப்படுகிறவனல்ல என்பதையும் எச்சரிக்கிறேன்."

"என்ன? ரோலண்டு பாதிரியையும் எதிர்க்கும் இந்தியன் ஒருவன் இங்கு இருக்கிறுனு? யார் அவன் சொல்லுங்கள், ராய் சாகிப். அவன் பல்லை உங்கள் முன்பே பிடுங்கிக் காட்டுகிறேன்."

ராய் சாகிப் அலட்சியமாகச் சிரித்தார். "கர்னல் வில்லியம்ஸ், உங்கள் வீர மெல்லாம் வெறும் வாய் வார்த்தையோடு சரி யென்றுதான் நான் தீர்மானிக்க வேண்டி யிருக்கிறது. சற்று முன்பு, அக்கிரமமாக உங்கள் மீது வண்டியை ஓட்டி காயமடையச் செய்ததோடு, உங்களை சரியானபடி கவனியாது, உங்களையும் உங்கள் அண்ணுவையும் அவமதிப்பாகப் பேசியவனை நீங்கள் என்ன செய்து விட்டீர்கள்?"

"உங்கள் குறிப்பை அறிந்து கொண்டேன், ராய் சாகிப். ஆனுல், மில்லுக்கு இடம் பிடிக்க வேண்டிய பிரச்னை முன் நிற்கையில் இந்த சின்ன விஷயத்தை பிரமாதப் படுத்துவானேன், என்று தான் அவனை இப்பொழுது போக விடுத்தேன். ஆயினும் அவனுடைய கொட்டத்தை அடக்காமல் இருப்பதில்லை என்பதை இன்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். முதலில் இந்த பெரிய காரியம் ஒருவாறு முடியட்டும்."

"இதை முடிப்பது தானே? ஆனுல் இதை முடிக்கவும் அவன் தான் குறுக்கிட்டிருக்கிறுன் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளவேண்டியிருக்கிறது;கர்னல் எவனுக்கு நீங்கள் இரக்கம் காட்டினீர்களோ, அந்த அலிபாவா விடம் தான் இவ்வூர் நிலங்கள் அனைத்தும் இருக்கின்றன. நீண்ட ஒப்பந்தத்தில் அவன் அவைகளை குத்தகைக்கு எடுத்து, வெற்றிலை பயிர் செய்து வியாபாரம் நடத்தி வருகிறுன். ஊர்க்காரர்களின் கடிவாளங்களெல்

லாம் தன் கையில் இருப்பதும், பணக்காரஞ யிருப்பதும், அவன் மமதையை ஓங்கச் செய்திருக்கின் றன. எவரையும் அவன் லட்சியம் செய்வது கிடையாது. இல்லாவிட் டால், 'கோவில்பட்டி சிங்கம்' என்று பெயர்பெற்ற ரோலண்டு பாதிரியை உதாசீனமாக மதித்துப்பேசுவாஞ?"

"என்ன, அந்த பக்கிரித் துருக்க னிடமா இவ்வூர் வாசிக ளெல்லோ ரும் அடிமைப்பட்டுக் கிடக்கிருர் கள்? உங்களைப் போன்ற படித்த பெரிய மனிதர்கள் இருக்கையில், அந்தப் பரதேசிப் பயலிடமா, இவ் வூர் நிலங்களெல்லாம் பிணைப்பட்டுக் கிடக்கின்றன? ராய் சாகிப், இது பொறுக்க முடியாத அவமானம். உங்களுக்கு மாத்திரமல்ல; எனக் கும்தான். அவனிடமிருந்து எனக்கு தேவையான நிலத்தைப் பிடுங்கி உங்களுக்கு மீதி நிலங்களையும் வாங் கித் தர நான் வழி செய்கிறேன். நீங்கள் முதலில் யாரையாவது அனுப்பி அவனை இங்கு அழைத்து வரச் செய்யுங்கள். நல்லதனமாக நமக்கு எல்லாவற்றையும் விட்டுத் தருகிருஞ, இல்லையா என்பதை கேட்டுவிட்டு, பிறகு அவனை அழிக்க வழி செய்வோம்."

"அவனிடம் என்ன கேட்க இருக் கிறது, கர்னல்? நீங்கள் வாய்திறந்து யாசித்தாலும் அவன் என்ன பதில் தருவான் என்பது எனக்கு நன்ரு கத் தெரியும். கர்னல் வில்லியம்ஸ், அவன் என்ன சொல்வான் தெரி யுமா? தன் குத்தகைக் காலம் முடிந்த பிறகு நிலச்சுவான்கள், நிலங்களை விட்டுத் தருவதாக இருந்தால், தனக்கு ஆட்சேபணை எதுவும் இல்லை யென்றுதான் சொல்லப்போகிருன். இந்த பதிலை அவன் வாயால் கேட்க வேண்டு மென்று உங்களுக்கு ஆவ லாயிருந்தால், இதோ இப்பொழுதே அவனைக் கூட்டிவர ஆள் அனுப்பு கிறேன். தவிர அவன் குத்தகைக் காலம் முடிய இன்னும் எத்தனை வருஷங்கள் இருக்கின்றன வென் பது உங்களுக்குத் தெரியுமா? ஒன்றி ரண்டல்ல; பத்து வருஷங்கள் நீங் கள் காத்திருக்கத் தயாரா யிருக்கி றீர்களா?"

"பத்து வருஷங்களா? நன்ருகச் சொன்னீர்கள். பத்து மாதங்களில் அவன் இடத்திலே என் ஆலை வேலை செய்கிறதா, இல்லையா, பாருங்கள். எதற்கும், 'என்னிடம் ஒரு வார்த்தை கேட்டிருக்கக் கூடாதா?' என்ற பழிச் சொல்லுக்கு நான் இடம் வைக்க விரும்பவில்லை. அவனைக் கூட்டிவரச் செய்யுங்கள். என்ன தான் சொல்லுகிருன் என்று பார்த்து விடுவோமே?"

ராய்சாகிப் பலமான அஸ்திவாரம் போட்டு விட்டார். அதன்மீது அலி பாவாவுக்கு அழகான சமாதி எழுப் பப்பட்டு விடுமென்ற நம்பிக்கை யுடன் அவரை கையோடு கூட்டி வரும்படி தன் ஆட்களில் ஒருவனை ஏவினர்

* * *

அலிபாவா, பாவம், ஏற்கனவே மனம் பதறிக் கொண்டிருந்தார். வில்லியம்ஸ் ரோலண்டு பாதிரியின் தம்பியாக இல்லாவிட்டால் அவர் அவ்வளவு கலக்க மடைந்திருக்க மாட்டார். ஏற்கனவே தன்மீது ஆத் திரம் கொண்டிருக்கும் அப் பாதிரிப் பிசாசிடம், இவன் இன்னும் என் னென்ன தூண்டி விட்டு தனக்கு துன்ப மிழைக்கச் செய்யப் போகி ருனோ வென்று அவர் கவலைப் பட்டுக் கொண்டிருந்தார். அச் சம யத்தில், அவன் தன்னைக் கூட்டி வரச் சொன்னதாக ராய் சாகிப்பின் வேலையாள் வந்த போது, இது ஏதோ விபரீதத்துக்குத்தான் என்ற திட்டம் அவருக்கு ஏற்பட்டு விட் டது. அவர் உடனே ராய்சாகிப்பின் பங்களாவுக்கு வந்தார்.

ராய்சாகிப்பை மொழி பெயர்ப் பாளராகக் கொண்டு வில்லியம் ஸுக்கும் அலிபாவாவுக்கும் இடையே பேச்சு ஆரம்பமாயிற்று. இச்சம்பாஷணையில் ராய்சாகிப் தன் கைச் சரக்கு எதையும் கலக்கவில்லை. ஏனென்ருல், அலிபாவா, வில்லியம் ஸுக்கு நிலங்களை விட்டுக் கொடுத் தாலும் கொடுக்கா விட்டாலும் அவன் அழிவு நிச்சயம் என்பதை அவர் அறிந்துகொண்டு விட்டார். ஒருகால், தன் ஒப்பந்தத்தை ரத்து செய்ய சம்மதித்து, மில்லுக்குறிய பூமியை விலைக்கோ, குத்தகைக்கோ கொடுக்கும்படி நிலச்சுவான்களை மனம் மாறச் செய்து விட்டால், அவர்களுக்கு அவனிடம் ஏற்பட்டி ருக்கும் மதிப்பு தாஞக குறைந்து விடும். பிறகு தன் திட்டப்படி அவனை முழுவதும் குழி தோண்டிப் புதைத்து விடுவது கஷ்டமானதல்ல.

நிலங்களைக் கொடுக்க மறுத் தாலோ, இதுவரை தான் ஏற்றிய உரையினுல், வில்லியம்ஸ், அலிபா வாவை முன்போல் நிம்மதியாக விவ சாயத்தையும் வியாபாரத்தையும் நடத்திக் கொண்டிருக்க விட்டு விட மாட்டான். அவனை வீழ்த்தி தனக்கு தேவையான பூமியை அடைய, ரோலண்டு பாதிரியும் அவனும், எந்த சூழ்ச்சியையும் செய்யத் தயங்க மாட்டார்கள். அவர்கள் சூழ்ச்சியி லிருந்து இந்த கிராமாந்திர வாசி தப்பி விடுவதாவது?

இரு புரமும் தனக்கு சாதகமா யிருக்கும்போது, எதற்காக இன்னும் கைச் சரக்குகளைக் கலக்கவேண்டும் என்றுதான், அவர்களுக்கிடையே நடந்த சம்பாஷணையை அப்படி அப் படியே மொழி பெயர்த்துத் தந்து கொண்டிருந்தார்.

இச்சமயம் வில்லியம்ஸின் பேச் சும் சற்று கடுமையாகத்தான் ஆரம் பமாயிற்று. ராய்சாகிப், அலிபா வாவை அவனுக்கு எவ்விதமாக உரு வகப் படுத்தியிருந்தாரோ, அதற்கு ஏற்பவே பேசத் தொடங்கினுன். அவன் சொன்னுன்: "என் போக் கில் ரஸ்தாவோடு போய்க்கொண்டி ருந்தவனை வேண்டுமென்று படுகா யப் படுத்திவிட்டீர்கள். வேறு எந்த மேல் நாட்டானும், இந்திய ஞெரு வன் இழைத்த இத்தகைய அவமா னத்தை சகித்துக் கொண்டிருக்க மாட்டான். ஆனுல், நான் காரி யார்த்தமாக அதை பொறுத்துக் கொள்ளுகிறேன். மிஸ்டர் அலி பாவா, உங்கள் ஊரில் ஒரு பஞ்சாலை தொடங்க திட்டமிட்டு, அதற்குறிய நிலத்தையும் தேர்ந்தெடுத்து, அதை விலை முடிக்கவே இன்று இவ்வூருக்கு புறப்பட்டு வந்தேன். வரும் வழி யிலே நீங்கள் என்னை படுகாயப் படுத்தி விட்டீர்கள். ஆயினும் அது வும் ஒருவிதத்தில் எனக்கு சாதகமா கவே முடிந்திருக்கிறது என்றுதான் சொல்லவேண்டும் ஏனெனில், நான் மில்லுக்கு தேர்ந்தெடுத்திருக்கும் நிலம் உங்கள் கைக்குள் இருக்கிறது என்று அறிகிறேன். எனக்கு செய்து விட்ட அவமதிப்பை மறந்துவிட, நான் எதைக் கேட்டாலும் நீங்கள்

கொடுக்க தயங்க மாட்டீர்கள் என்பதை அறிவேன். அந்த உரிமையுடன் கேட்கிறேன்: ஒன்று, என் ஆலைக்கு தேவையான பூமியை அதனதன் சொந்தக் காரர்களிடமிருந்து விலைக்கு வாங்கிக் கொடுங்கள்; அல்லது, நீண்ட ஒப்பந்தத்தில் வாடகைக்காவது தரச் செய்யுங்கள்."

இதைக் கேட்டதும் அலிபாவாவுக்கு தலைமேல் இடி விழுந்தது போல இருந்தது. 'நிலங்களை விட்டுக் கொடுத்தால், செழிப்புடன் நிலை பெற்றிருக்கும் தன் வியாபாரம் என்னாவது? கொடுக்கா விட்டாலோ, தன் வருமத்தைத்தீர்த்துக்கொள்ள, ரோலண்டு பாதிரிக்கு வலுவில் ஓர் சந்தர்ப்பத்தை அளித்தது போலாகி விடும்' என்றிவ்வாறு அவர் மனம் சிறிது நேரம் அல்லலுற்றது. ஆயினும் கடைசியில் ஓர் தீர்மானத்துக்கு வந்து விட்டார்—தன் வியாபாரம் ஓரளவு குறைந்து விட்டாலும் பரவாயில்லை. அந்தப் பழிகார வெள்ளைப் பிசாசின் கையில் சிக்கிக் கொள்ளலாகாது, என்று. ஆகவே அவர் சொன்னார்: "நீங்கள் ஆலைக்கு பொறுக்கி யிருக்கும் பகுதி என் ஆதீனத்தில் இருப்பது உண்மையே. அவைகளை அதனதன் சொந்தக்காரர்கள் உங்களுக்குத் தர சம்மதிப்பார்களானால், என் ஒப்பந்தப் பத்திரத்தை ரத்து செய்து விடத் தயாராக இருக்கிறேன். உங்களைப் போலொத்த பெரிய மனிதர்களின் தயவு கொண்டு கிராமவாசியாகிய நான் வாழ வேண்டியவன். ஆகவே ஒரு போதும் உங்கள் தேவைகளில் குறுக்கிட மாட்டேன்."

"நீங்கள் இப்படி கையை விரித்து தப்பிக் கொள்ள முயலுவீர்கள் என்பதை நான் முன்பே நினைத்ததுண்டு. ஆனால், இன்று எனக்கு இழைத்து விட்ட அவமானத்தின் பிறகு, உங்களை அப்படி எளிதில் தப்பி ஓடி விட அநுமதித்து விட மாட்டேன். மிஸ்டர் அலிபாவா, இவ்வூர் நிலச்சுவான்களும் குடியானவர்களும் நீங்கள் ஆட்டிவைத்தபடி ஆடக்கூடியவர்கள் என்பது தெரிந்த பின்னர், என் ஆலைக்குறிய நிலங்களை வாங்கித் தரும் பொறுப்பை உங்கள் மீது சுமத்துவது சற்றும் தவறாகாது."

அலிபாவா குழைவுடனும் தாழ்மையுடனும் சொன்னார்: "துரை அவர்கள், இந்த எளியவனின் சக்திக்கு புறம்பான பாரத்தை என்மீது சுமத்துகிறீர்கள். இதோ, இப்பொழுதே அந்நிலங்களின் சொந்தக்காரர்களை இங்கு வரவழைக்கிறேன். உங்கள் முன்பே அவர்களிடம் சொல்லுகிறேன். ஆனால் கொடுப்பதும் வாங்குவதும் உங்கள் இருவருக்குள்ளும் தீரவேண்டிய பிரச்னை. அதற்கு என்னைப் பொறுப்புக் கட்டுவது பொருத்தமாகாது."

"மிஸ்டர் அலிபாவா, நீங்கள் பேசுவதைப் பார்த்தால் நான் அந்நிலங்களை இனாமாகக் கேட்பது போலல்லவா இருக்கிறது? உங்களுக்கு அந்த சந்தேகம் சிறிதும் வேண்டாம். நிலத்தை விலைக்குத் தருவதாக இருந்தால், அவர்கள் கேட்கும் விலையை கொடுக்க தயாராகவே இருக்கிறேன். இல்லை; குத்தகைக்குத்தான் கொடுப்பார்கள் என்றால், அதற்கும், இப்பொழுது நீங்கள் அளிக்கும் தொகைக்கு சற்றும் குறையாத தொகையைக் கொடுப்பேன். இதற்காக, அவர்களை என் முன் கொண்டு வந்து நிறுத்தி கேட்க வேண்டும் என்பதொன்றும் அவசியமில்லை. நீங்கள் என்ன சொல்லுவீர்களோ, அல்லது செய்வீர்களோ, எனக்குத் தெரியாது. நான் வேண்டி நிற்கும் பூமியை வாங்கித் தரவேண்டியது உங்கள் பொறுப்பு."

அலி பாவாவுக்கு என்ன சொல்வதென்றே தோன்றவில்லை. அன்று தொடங்கி தன்னை சைத்தான் பிடித்துக் கொண்டு விட்டான் என்றே அவர் நினைத்தார். இவ்வளவு தகராறுக்கும் ராய் சாகிப் ஒரு வார்த்தை கூட தன் அபிப்பிராயத்தை வெளியிடாது, வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது அவருக்கு வருத்தத்தை அளித்தது. ஏன்? அவருக்கு அவ்வூர் நிலச்சுவான்களின் மன நிலை தெரியாதா? நெல் விளைக்கும் பூமியை தரிசாக்கி, கட்டிடம் எழுப்பி புகை விளையும் பூமியாக்க எந்த விவசாயியும் மனம் ஒப்ப மாட்டான் என்பதை அவர் இந்த வெள்ளைக்காரனுக்கு எடுத்துச் சொல்ல லாகாதா? என்னவோ, ஆபத்துக் காலத்தில் எல்லோரும் கை விட்டு விடுவார்கள் என்பதை மெய்ப்பிப்பவர் போல, இப்படி சலனமின்றி உட்கார்ந்திருக்கிறாரே' என்றெல்லாம் எண்ணி வருந்தினர்.

எனினும், கடைசியாக தன்னைத் தானே தேற்றிக்கொண்டார். 'வரும் விதி வழியில் தங்காது. நான் அந்தப் பாதிரியின் கொடுமைகளுக்கு ஆளாக வேண்டுமென்றிருந்தால், அதை எவர்தாம் தடுக்க முடியப் போகிறது. எதற்கும் நிலச்சுவான்களை இங்கு கூட்டி வரச் செய்து, இவர்கள் முன்பே கேட்டு விடுவோம்' என்றெண்ணியவராய், ராய் சாகிப்பின் வேலையாட்களில் ஒருவனை அனுப்பி அவர்களை அழைத்து வரச் செய்தார்.

அவர்கள் வந்ததும் நிலைமையை யெல்லாம் தெளிவாகச் சொன்னர். தான் பெரிய இக்கட்டில் மாட்டிக் கொண்டிருப்பதையும் விளக்கிக் கூறினர். அவர்கள் நிலங்களை தன்னை உத்தேசித்தாவது விட்டுக் கொடுக்கத்தான் வேண்டுமென்றும் மன்றடிக் கேட்டுக் கொண்டார். ஆனால் விவசாயத்தையும் பூமியையும் தங்கள் பிரியா உடமையாகக் கொண்ட மக்களிடமிருந்து அதை அவரால் பிரித் தெடுக்க முடியவில்லை. பாவம், அவர்தான் இதற்கு அதிகமாக என்ன செய்ய முடியும்?

ஆனால் வில்லியம்ஸ் அவர் மனச் சஞ்சலத்தை அறிந்தானா? இல்லை; ராய் சாகிப் ஏற்றி வைத்த வத்தி அவன் உள்ளத்தில் புகை மூட்டத்தையே உண்டாக்கிற்று. சும்மா போக்குக் காட்டவே, அலிபாவா இவ்வாறு நிலச் சுவான்களை தன் முன் கூப்பிட்டு நிறுத்தி வீண் பேச்சு பேசினர் என்றுதான் அவன் நினைத்தான். இந்த முடிவு அவனை வெறி கொள்ளச் செய்தது. அலிபாவாவை வாயில் வந்தவாறு பேசி, ஒரு அடி மண்கூட அவருக்கு இல்லாது, அத்தனை நிலத்தையும் பிடுங்க வில்லை யென்றால், தன் உடம்பில் ஓடுவது பிரிட்டிஷ் ரத்தம் அல்ல வென்று வீறு கொண்டு கத்தினன்.

அலிபாவா, பாவம், வருவது வரட்டும் என்றிருப்பதைத் தவிர அவருக்கு வேறென்ன வழி இருந்தது?

* * * *

உடம் பெங்கும் காயத்துடனும், ஏமாற்றமும் ஆத்திரமும் கொண்ட

உள்ளத் துடனும் அன்று மாலை கோவில் பட்டிக்கு வந்து சேர்ந்தான் வில்லியம்ஸ். உடல் வேதனையும் உள்ளத்தின் வேதனையும் ஏற்படுத்திய வெறி அடங்காதவனாய் வீட்டில் நுழைந்ததும், நேரே பாதிரியின் அறைக்கு சென்று, "இதோ, பாதிரி அண்ணா, இந்திய மண்ணுக்கு நீ பதினைந்து வருஷங்களாக உழைத்ததற்கு, அது எனக்கு அளித்த வெகுமதி" என்று கத்தினான்.

அவன் கோலத்தைப் பார்த்து பாதிரி பதறிப் போய் விட்டார். "என் அருமைத் தம்பி வில்லியம்ஸ், எந்த துரோகியடா உன்னை இவ்வாறு காயப் படுத்தியவன்?" என்று கோபத்தின் அறிகுறியாக தன் நீண்ட வெள்ளைத் தாடியை உருவி விட்டார்.

வில்லியம்ஸ் அன்று காலை முதல் நடந்தவற்றை யெல்லாம் அவருக்குச் சொன்னான். கடைசியாகக் கூறினான்: "அண்ணா, ஆயிரம் மைல்களுக்கு அப்பாலிருக்கும் நாட்டிலிருந்து வந்து அரசாண்ட பிரிட்டிஷான் என்ற உணர்ச்சி உனக்கு சிறிதேனும் இருக்குமானால், இந்த அவமானம் உன் தம்பிக்கு மாத்திரம் ஏற்பட்டதல்ல; ஆங்கில வம்சத்துக்கே இழைக்கப்பட்டது என்று தெரிந்து, அதற்குரியபடி, அந்த பஞ்சை இந்தியனை பழி வாங்க வேண்டும். அவன் இடத்தையே பிடுங்கி என் மில்லுக்கு தரவில்லையானால், உன் தம்பி என்று கூறிக் கொள்வதில் நான் இதுவரை அடைந்திருந்த பெருமையை, இனி அவமானமாகத் தான் கருத வேண்டும்."

பாதிரியாரின் பூனைக் கண்கள் ரத்தம்போல் சிவந்தன. முன்பு தன் பிரசார முயற்சிக்கு தடையாக வந்த அலிபாவா இப்பொழுது தன் தம்பியின் முயற்சிக்கும் தடையாக வந்து விட்டான் என்பதை அறிந்ததும் அவனைப் பூண்டோடு அழித்துவிட வேண்டியதுதான் என்ற உறுதி கொண்டார்: கோபத்திலும் வேகத்திலும் குரல் படபடக்க அவர் சொன்னார்: "தம்பி வில்லியம்ஸ், உன் கோரிக்கையை நிறைவேற்றி வைப்பேன். நிச்சயமாக நிறைவேற்றி வைப்பேன். ஏற்கனவே நான் வஞ்சம் தீர்க்க சமயம் நோக்கியிருந்த அலிபாவாவை ஒழிக்க இன்று சமயம் வந்துவிட்டது. இதோ இன்று முதல் முயற்சி எடுத்துக் கொண்டு அவனை பஞ்சாய்ப் பறக்கவிட்டு விடுகிறேன். பிரிட்டிஷ் மண் பிறப்பித்து அனுப்பிய ரோலண்டு பாதிரியின் செல்வாக்கு இந்திய மண்ணிடம் எவ்வளவு விலை பெற்றிருக்கிறது என்பதை நிதரிசனமாக்குகிறேன். தம்பி, இனி மில்லுக்கு இடத்தைப் பற்றிய கவலையை ஒழித்துவிட்டு, இதர முயற்சிகளில் நீ இறங்கலாம். எந்த பூமியை நீ பொறுக்கியிருக்கிறாயோ, அதையே கிடைக்கச் செய்வது இனி என் பொறுப்பு."

இவ்வளவு வீரமாகப் பேசினாரே, ரோலண்டு பாதிரியார்? அதை செய்ய வல்லவர்தானா அவர்? ஆம்! செய்ய வல்லவர்தான். ஆனால் இப்பொழுதல்ல; இரண்டு மாதங்களுக்கு முன்பு—இந்திய அரசாங்கம் பாதிரியின் வம்சத்தார்களின் கையில் இருந்தபோது — இருந்தால், கைசொடுக்கும் நேரத்துக்குள் நினைத்ததை முடித்து விட்டிருப்பார் அவர்.

ஆனால் இப்பொழுதோ?

இப்பொழுதும் அது முடியும் என்றுதான் அவர் நம்பியிருந்தார். பெருங்காயம் வைத்திருந்த செப்பு என்றுமே மணக்கும் என்பதுதான் அவர் கருத்து. ஆனால், அது, பெருங்காயம் காலியான பிறகு நெடுநாள் மணக்காது என்பது அவருக்கு தெரியவில்லை போலும்.

(தொடரும்)

  

**கயை காங்கிரஸில் "மாறுதல் வேண்டாத" கோஷ்டிக்கு ராஜாஜி தலைமை வகித்தார். திட்டத்தை மாற்ற வேண்டும் என்று கூறிய தலைவர்களின் வாதங்களை யெல்லாம் எதிர்த்துத் தவிடு பொடியாக்கினார். அவருடைய வாதத்திறமையும் சொல் திறமையும் கயை காங்கிரஸில் குன்றின்மேல் இட்ட தீபத்தைப்போல் பிரகாசித்தன.**

**—கல்கி.**

# பாலைவனத்தில் இரவு

உமாசந்திரன்

சூழ்ன்றடிக்கும் புயற்காற்றுப்போல் தங்கு தடையின்றி முன்னேறி வந்துகொண்டிருந்த எதிரியை, எல் அலமினில் புறங்காட்டிப் பின் நோக்கி ஓடச்செய்த மகத்தான போரில்தான் மூர்த்திக்கு இடது தோளில் காயம் பட்டது. அப்போது ஓட ஆரம்பித்த எதிரி விடி பரானியில் வந்துதான் சற்று கால் ஊன்றினான். முகாம் ஆஸ்பத்திரியில் கழித்த ஒரு மாதத்தில் அங்கங்கே எதிரி அடைந்துவந்த தோல்விகளை பற்றிக் கேட்கும்போதெல்லாம் அப்போதே எழுந்து அந்த வெற்றிகளில் பங்கெடுத்துக் கொள்ளவேண்டுமென்று மூர்த்தியின் மனம் துடித்துக் கொண்டிருந்தது. விடி பாரானியில் எதிரி நிலைத்து நின்று சண்டையிடுகிறான் என்ற சேதி கேட்டதும், அவன் ஆத்திரம் பன்மடங்கு அதிகரித்துவிட்டது. காப்டன் இன்னும் ஒருவாரம் ஓய்வு எடுத்துக் கொள்ளலாம் என்று சொன்னபோது, அந்த ஆத்திரமே 'இன்னும் ஒருவாரமா' என்ற கேள்வியாக வெளிப்பட்டது. எல் அலமீன் போரைப்பற்றி பத்மாவுக்கு அவன் விரிவாக எழுதியிருந்தான். விடி பரானிப் போரில் பங்கெடுத்துக் கொண்டு அதைப் பற்றியும் அவளுக்கு எழுத அவன் கை ஊறிக் கொண்டிருந்தது.

பிரம்மாண்டமான வண்டு ரீங்காரம் செய்வதுபோல் சத்தமிட்டுக் கொண்டு இருண்ட அந்த இரவில் அகண்டமான மணற்பரப்பினூடே சென்று கொண்டிருந்தது லாரி. சந்திரன் இன்னும் உதயமாகவில்லை. எங்கும் நிசப்தம் நிலவியிருந்தது. அந்த நிசப்தத்தில் லாரியின் ரீங்காரம் ஓர் தனி கம்பீரத்துடன் தொனித்தது. உற்சாகமான எண்ணங்களின் போக்கில் தன்னை மறந்திருந்த மூர்த்தி கொஞ்சநேரம் அந்த சப்தத்தைக் கவனிக்கவில்லை. ஆனால் கவனிக்க ஆரம்பித்ததும் அவனது உற்சாகம் பன்மடங்கு அதிகரித்தது. அவன் சாரீரத்துக்கு சரியான சுருதியாயிருந்தது லாரியின் ஓசை. கேட்பானேன். ஆனந்தமாக பாட ஆரம்பித்துவிட்டான்.

மூர்த்தி சங்கீதப்பித்து. காலேஜில் படித்த நாட்களில் அவன் பாடாத கொண்டாட்டம் கிடையாது. வட இந்தியாவில் கழித்த ஒரு வருஷத்தில் ஹிந்தி, வங்காளிப் பாடல்களும் அநேகம் அவனுக்குப் பாடமாயிருந்தன. அவனைப் பாடச் சொல்லிக் கேட்பதற்காக ஹாஸ்டல் சகாக்கள் சாப்பாடானதும் அவனது அறையில் கூடிவிடுவார்கள். இப்போதோ முகாமில் ஓய்வெடுத்துக் கொள்ளும் போது, சிப்பாய்கள் அவன் பாட்டைக்கேட்க அவனது கூடாரத்துக்குமுன் கூடிவந்தார்கள். அவன் பாடிய சில ஹிந்தி பஜன்களைக் கேட்டுவிட்டு வட இந்திய சிப்பாய்கள் அவனை பகத் பாபூ என்று அன்புடன் அழைப்பது வழக்கமாய் விட்டது.

மூர்த்தியின் பாட்டைக் கேட்டுக் கொண்டு வந்த சீக்கிய லாரி டிரைவர் பாட்டு முடிந்ததும், மறுமுறை என்று கெஞ்சுவதுபோல் பார்த்தான். அவனுடைய வேண்டுகோளுக்காக மூர்த்தி காத்திருக்கவில்லை. வழிநெடுக பாடிக்கொண்டே இருப்பதற்கு வேண்டிய உற்சாகம் அவன் மனதில் நிரம்பியது.

தனக்காகக் காத்திருக்கும் ஏமாற்றத்தைச் சற்றும் எதிர்பாராமல் பாடிக்கொண்டிருந்தான் மூர்த்தி. ஆம். ஒரு பெரிய ஏமாற்றம் அவனுக்காகக் காத்திருந்தது.

> "1942-க்கு முன்னாலிருந்த ராஜாஜியைக் காட்டிலும் அதற்குப் பிந்தைய ராஜாஜியையே நான் போற்றுகிறேன். நேற்று வரை நண்பர்களாயிருந்தவர்கள் அவரைக் கைவிட்டு விரோதியைப் போல் நடத்தினார்கள். ஆயினும் அவர் தாம் கண்ட உண்மை நெறியிலிருந்து விலகவில்லை. அது மட்டுமல்ல; நேற்றுவரை நண்பர்களாயிருந்து இன்று கைவிட்டவர்களைப் பற்றிக் குறை கூறி ஒரு வார்த்தையும் அவர் சொல்லவில்லை!"
>
> DR. ஏ. லக்ஷ்மணசாமி முதலியார்

விடி பரானியை நெருங்கும் போதே அவனது ஏமாற்றம் ஆரம்பித்துவிட்டது. பாடுவதை நிறுத்திவிட்டு பீரங்கிகளின் முழக்கத்திற்காக காதைத் தீட்டிக்கொண்டிருந்த அவனுக்கு எங்கும் நிலவியிருந்த நிச்சப்தம் சகிக்கக்கூடாத தாயிருந்தது.

'இன்னும் எத்தனை தூரம் இருக்கிறது?' என்று கேட்டான் பொறுமையிழந்து.

'எழுபத்தைந்து மைல் வந்துவிட்டோம்; இன்னும் பத்து மைல்தான் பாக்கி இருக்கிறது.'

'பத்து மைல் இருந்துமா சப்தம் ஒன்றும் கேட்கவில்லை?'

'எனக்கும் அதுதான் ஆச்சரியமாயிருக்கிறது,' என்றான் ட்ரைவர்.

தணிவான நிலப்பரப்பிலிருந்து ஓர் மேட்டில் மெதுவாக ஏறிக் கொண்டிருந்தது வாரி.

'மேட்டின் உச்சியை அடைந்து விட்டால் விடிபாராணிக் கோட்டை நன்றாய்த் தெரியும்' என்றான் ட்ரைவர்.

சந்திரன் உதயமாகி அரைமணியாய்விட்டது. நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகரிக்கும் அந்தப் பிரகாசத்தில் எதிரே தோன்றிய மணற்குன்று அபூர்வமான தோற்றத்தை அளித்தது.

மேட்டின் உச்சியை அடைந்து கீழே பார்த்ததுமே சீக்கிய ட்ரைவர் 'ஸத்ஸ்ரீஅகால், ஸத்ஸ்ரீஅகால்' என்று மும்முறை கூவினன். எதிரே காலியாயிருந்த முகாம் மைதானமும் கோட்டைக்குள்ளிருந்து வந்த வெளிச்சங்களும் வெற்றி கிடைத்து விட்டதை அவனுக்கு அறிவித்தன. ட்ரைவரது சந்தோஷத்தில் கலந்து கொள்ளும் மனோநிலையில் மூர்த்தி இல்லை. பலமாய் வேரூன்றியிருக்கிறது என்று நினைத்து முழுபலத்துடன் பிடுங்க முயற்சித்த செடி கை வைப்பதற்கு முன் கையோடு வந்துவிட்டால் ஏற்படும் ஏமாற்றம் அவன் மனதில் உண்டாகியது.

ட்ரைவர் தனது கர்க்கசமான குரலில் ஏதோ பஞ்சாபி கீதத்தைப் பாடிக்கொண்டே அதிதுரிதமாய் லாரியைச் செலுத்திக்கொண்டிருந்தான். ஐந்தே நிமிஷத்தில் லாரி கோட்டை வாயிலை அடைந்துவிட்டது.

வாயிலில் காத்திருந்த ஹிந்துஸ்தானி ஸென்ட்ரி லாரியை அணுகி உள்ளே எட்டிப் பார்த்தான். மறுகணம், 'பகத்பாபூ, பகத்பாபூ' என்று கூவினன். மூர்த்தியின் பட்டாளத்தில் பகத்பாபுவைத் தெரியாதவர் கிடையாது.

பக்கத்திலேயே ஓர் ஹோட்டலில் வேறுபலர் வெற்றிக்களிப்பில் கூத்தடித்துக்கொண்டிருந்தனர். நொடிப் பொழுதில் மூர்த்தியின் வரவைப்பற்றிய செய்தி அவர்களுக்குள் பரவிவிட்டது. எல்லோரும் ஓடிவந்து மூர்த்தியைச் சூழ்ந்துகொண்டு தங்கள் கேள்வி மாரியால் அவனைத்திணர அடித்து விட்டனர்.

களிப்பில் மலர்ந்த அவர்களது முகத்தைப் பார்த்ததும் மூர்த்தியின் ஏமாற்ற உணர்ச்சி இருந்த இடம் தெரியாமல் மறைந்தது. அவர்களது உற்சாகம் அவனையும் தொத்திக் கொண்டது. அவர்களைப் பின்பற்றி அவனும் ஹோட்டலுக்குள் நுழைந்தான். லெப்டினென்ட் பதவியில் இருந்தாலும் சாதாரண சிப்பாய்களுடன் தாராளமாகப் பழகுவதற்கு அவன் தயங்கியதில்லை.

மேஜைமேல் வைக்கப்பட்டிருந்த விதவிதமான உணவு வகைகளைப் பார்த்ததும் மூர்த்திக்குளெங்கிருந்தோ அவசரமான பசி கிளம்பியது. மேஜையருகே உட்கார்ந்து எல்லாவற்றையும் ஒருகை பார்க்க ஆரம்பித்தான்.

ஜமேதார்களில் ஒருவன் குறும்புக்காரன். மூர்த்தியைப் பார்த்து அவன் 'பகத்பாபு, ஒரு பந்தயம் வைப்போமா?' என்றான் ஹிந்தியில். மூர்த்தி அவனைப் பார்த்துச் சிரித்தான். அந்த ஜமேதார் வலக்கண்ணை இருக்கிக்கொண்டு புன்னகை செய்வதைப் பார்க்கும் போதெல்லாம் மூர்த்திக்குச் சிரிப்பு வந்துவிடும்.

'என்ன பந்தயம் ஜமேதார்' என்றான்

'யார் அதிக ரொட்டி சாப்பிட முடிகிறதென்று,' என்றான் ஜமேதார்.

'வாஹ்வா, வாஹ்வா' என்று சிரித்துக்கொண்டே மற்றச் சிப்பாய்கள் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்தனர்.

பந்தயத்தில் மூர்த்தி ஜயிக்கவில்லை. உடனே தான் பந்தயப் பொருளைப்பற்றி ஞாபகம் வந்தது.

'பாடட்டுமா' என்று கேட்டான்.

ஜமேதார் ஒரு குறும்புச் சிரிப்புச் சிரித்தான். 'பத்து பாடல் பாடவேண்டும்' என்றான். மறுகணம் அந்த அறை முழுதும் சிப்பாய்களின் சிரிப்பு எதிரொலித்தது.

மூர்த்தி பத்துப் பாட்டோடு நிறுத்தவில்லை. பாடிக்கொண்டே இருந்தான். அத்தனைபேரும் மந்திரத்தால் கட்டுண்டவர்போல் மெய் மறந்து அவனது பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

எக்ஸ்பிரஸ் மெஸஞ்சர் ஒருவன் அவசர அவசரமாக உள்நுழைந்ததும்தான் அவர்களுக்கு சுய நினைவு வந்தது. வந்தவன் கர்னலிடமிருந்து மூர்த்திக்குச் செய்தி கொண்டு வந்திருந்தான். அவன் விடிபாராணிக்கு வருவான் என்று எதிர்பார்த்த கர்னல் உடனேயே டோப்ருக் பகுதிக்கு வரும்படி அவனுக்கு உத்திரவு அனுப்பியிருந்தார்.

மறுநாள் அதிகாலையில் மூர்த்தி ஒரு ஸ்பெஷல் மோட்டாரில் டோப்ருக் பகுதிக்கு விரைந்து கொண்டிருந்தான்.

* * *

மூர்த்தியை இந்நிலையில் விட்டு சென்னை நகருக்குச் செல்லவேண்டியவர்களாகிறோம். மூர்த்தியின் வீடு திருவல்லிக்கேணியில் இருந்தது. அந்த வீட்டில் மூர்த்தியின் தாயாரும் பத்மாவும் மட்டும் இருந்துவந்தார்கள். பத்மாவின் தகப்பனார், பக்கத்திலேயே பூந்தமல்லியில் தான் மிராசுதாரராயிருந்தார். ஆனால் அவர் எவ்வளவோ வற்புறுத்தி அழைத்தும் பத்மா பிறந்த வீடு செல்லவில்லை.

பத்மா படிக்கும் நாட்களில் பூகோளத்தில் பூஜ்யம்தான்வாங்கிவந்தாள். பூகோள பாடமென்றாலே வேப்பங்காய் அவளுக்கு. இப்போதோ, எங்கிருந்தோ பூகோள புத்தகங்களில் கனசிரத்தை விழுந்து விட்டது. அதுவும் பாலை வனத்தின் மேல் அபார வாத்ஸல்யம். பாலைவனத்தைப்பற்றி வந்தாலே புஸ்தகத்தை வீசிவந்த பத்மா இப்போது ஒவ்வொருபூகோள புஸ்தகமாகப்புரட்டி பாலைவன ஆராய்ச்சி செய்துவந்தாள்.

திடீரென்று புஸ்தகமும் கையுமாக விசாலாக்ஷியம்மாளிடம் வந்து 'அம்மா, பாலைவனத்தில் திடீர் திடீர்னு பெரிய புயல்காத்து அடிக்குமாமே என்பாள்.'

"புஸ்தகத்தில் அப்படித்தான் ஏதேனும் காமாசோமான்னு எழுதியிருக்கும்" என்பாள் விசாலாக்ஷியம்மாள்.

"இல்லை அம்மா. நிஜமாகவே புயல்காற்று ரொம்ப பலமாய் அடிக்குமாம். ஒரேயடியாய் மணலை வாரிக் கிளப்பி, வந்துகொண்டிருப்பவர்களையெல்லாம் மூடிவிடுமாம்,' என்று பத்மா தான் படித்ததை விவரிப்பாள்.

பத்மா இந்த மாதிரி விவரிக்கும் போது விசாலாக்ஷி அம்மாளுக்கு உள்ளூர பயம்தான். பிள்ளை க்ஷேம மாகத் திரும்பி வரவேண்டுமென்று இஷ்ட தெய்வங்களை வேண்டிக் கொள்வாள். ஆனால் வெளிக்கு, "கண்ட புஸ்தகங்களை யெல்லாம் படித்து மனதை அலட்டிக் கொள்ளாதே", என்பாள், கண்டிக்கும் தோரணையில்.

ஆனால், மாமியாரின் கண்டிப்புக்காக பத்மா தன் ஆராய்ச்சிகளை நிறுத்துவதில்லை. திடீரென்று நினைத்துக்கொண்டு நாள் முழுதும் தண்ணீர் குடிக்காமல் இருந்து பார்ப்பாள். நாவு வறட்டிக் கொண்டு வரும்போது, இதே அநுபவம் கணவனுக்கும் ஏற்படாதிருக்க வேண்டுமென்று அவள் மனம் பதைக்கும். ஆனால் விசாலாக்ஷி யம்மாள் 'அடி பைத்தியமே இப்போதெல்லாம் தண்ணீர் எடுத்து வருவதற்கென்றே பிரம்மாண்டமான லாரிகள் இருக்கின்றனவே' என்று சொன்னதும் தான் அவள் மனம் நிம்மதி யடையும்.

பூகோளப் படிப்பில் மட்டுமல்ல. பத்திரிகை படிப்பதிலும் அவளுக்குத் திடீரென்று மோகம் பிறந்து விட்டது. தினமும் பத்திரிகைப் பையன் வரும் நேரத்திற்கு தயாராய் வாயிலில் நின்றுகொண் டிருப்பாள். பத்திரிகை வந்ததும், ஒரு மணி நேரம் லிபியா போரைப் பற்றிய செய்திகளில் மூழ்கி யிருப்பாள். அப்போது யுத்தத்தின் போக்கைப் பற்றி அவள் போட்டுக் கொள்ளும் திட்டங்கள் பெரிய பெரிய ராணுவ நிபுணர்களும் அவளிடம் பிச்சை வாங்கும்படி யிருக்கும்.

பத்திரிகை வரும் நேரத்தை எதிர் பார்த்துத் துடித்துக் கொண்டிருந்தது போலவே தபாலை எதிர் பார்த்தும் துடித்துக் கொண்டிருந்தாள் பத்மா. ஆனால் அவள் எதிர் பார்த்த கடிதம் தான் வரும் வழியாயில்லை. பத்மாவுக்குத் தபால்காரன் மேல் கனத்த கோபம். அவன் கைராசிக்காரனில்லை என்று அவள் முடிவு கட்டி விட்டாள். அவன் தொலைந்து வேறு தபால்காரன் வந்தால் தான் க்ஷேமம் என்பது அவள் எண்ணம்.

இம்மாதிரி பத்மாவின் நாட்கள் விவரிக்கமுடியாத தவிப்பில் கழிந்து வந்தன. ஆனால் தன் கணவனுக்கு ஆபத்து ஒன்றும் நேராது என்ற நம்பிக்கை மட்டும் அவள் மனதில் இருந்தது. அந்த நம்பிக்கையில் தான் அவள் நாட்களைக் கழித்து வந்தாள்.

ஒரு நாள் அந்த நம்பிக்கையிலும் கல்லைப் போடும்படியான செய்தி ஒன்று அவள் காதுக்கு எட்டியது. மூர்த்தி அபாயமான காயம் பட்டுக் கிடப்பதாக, மூர்த்தியுடன் சேவை செய்யும் ஒரு உத்யோகஸ்தர் தம் நண்பருக்கு எழுதி யிருப்பதாக தன் புருஷன் தன்னிடம் சொன்ன கதையை கண் மூக்கு வைத்து பத்மாவிடம் சொல்லிவிட்டாள் ஒரு ஸ்நேஹிதி. அவ்வளவுதான். அப்போது கட்டிலில் கவிழ்ந்து விம்ம ஆரம்பித்த பத்மா இரண்டு நாளாக அன்ன ஆகாரமின்றி விம்மிக்கொண்டிருந்தாள். பொங்கி யெழும் கண்ணீரை அடக்கிக் கொண்டு விசாலாக்ஷி அம்மாள் அவளைத் தேற்ற எடுத்துக் கொண்ட முயற்சிகளெல்லாம் வீணாயின.

இந்த நிலைமையில் தான் காப்டன் சங்கர் வந்து சேர்ந்தார். பழக்கமான குரல் ஒன்று பெயர் சொல்லி யழைப்பதைக் கேட்ட விசாலாக்ஷி அம்மாள் வெளியில் வந்து காப்டனைக் கண்டதுமே வாய்விட்டு அலறி விட்டாள். அவள் அடக்கி வைத்திருந்த துக்கமெல்லாம் காப்டனைக் கண்டதும் பீறிட்டுக் கொண்டு கிளம்பியது. கையில் முகம் புதைத்து விம்மினாள்.

காப்டனுக்கு ஒன்றும் புரியவில்லை சற்று நேரம். பின்பு, "விசாலம், நீயுமா அதைரியப் படுகிறாய்? உன் பிள்ளை க்ஷேமமா யிருக்கிறான். கவலைப்படாதே", என்று சொல்லிக் கொண்டே மூர்த்தியின் கடிதத்தை அவள் கையில் கொடுத்தார். அதைப் பார்த்ததுமே விசாலாக்ஷி அம்மாவின் துக்கம் பறந்தோடியது. 'பத்மா, பத்மா' என்று கூவிக் கொண்டு உள்ளே ஓடினாள் ........

எல் மட்ரூ டோப்ருக் பகுதியில் பரந்த மணற் காட்டின் மத்தியில் உள்ளதோர் கிராமம். டோப்ருக் வீழ்ந்த பிறகும் எல் மட்ரூவைச் சுற்றியுள்ள பகுதியில் எதிரிகள் நடமாட்டம் இருந்து வந்தது. இவர்களுடைய நடமாட்டங்களை அறிந்து கொள்வதற்காக நியமிக்கப்பட்ட ரோந்துப் படையின் ஒரு பகுதி மூர்த்தியின் தலைமையில் இருந்தது.

ஒரு இரவு பதுங்கிப் பதுங்கி எதிரியைப் பற்றிய சின்னம் ஏதேனும் தெரிகிறதா என்று பார்த்து வரும் போது, ஒரு மணல் மேட்டுக்குப் பின்னால் நிறுத்தப்பட்டிருந்த எதிரி லாரி ஒன்று மூர்த்தியின் கண்ணில் பட்டுவிட்டது. லாரி ஓட்டி மட்டும் தான் அதில் இருந்தார். யாரையோ எதிர் பார்த்துக் கொண்டிருப்பவன் போல் காணப்பட்டான்.

சரியான வேட்டை யிருக்கிறதென்று தெரிந்துகொண்ட மூர்த்தி, தன் ஆட்களைப் பக்கத்திலேயே பதுங்கிக் கொள்ளச் செய்து விட்டு, தான் மட்டும் சற்று உயர இருந்து நடப்பவைகளைக்கவனித்துக் கொண்டிருந்தான். சற்று நேரத்திற் கெல்லாம் ஓர் பெண்ணின் கூச்சல் அந்த இருண்ட நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு கிளம்பியது. மூர்த்தி திடுக்கிட்டான். ஏழெட்டுப் பேர் ஒரு பெண்ணுருவத்தை இழுத்துச் செல்வது தெரிந்தது. அந்தப் பெண் கூச்சல் போட்டுத் திமிற முயற்சித்துக் கொண்டிருந்தாள்.

மறு கணம் மூர்த்தியின் கைத்துப்பாக்கியிலிருந்து கிளம்பிய குண்டு எதிரிகளில் ஒருவனைக் கீழே வீழ்த்தியது. கூச்சலிட்டுக் கொண்டே அவர்களை நோக்கிப் பாய்ந்தான் மூர்த்தி. அவன் ஆட்களும் அவனைப் பின் தொடர்ந்தனர்.

ஒரே சமயத்தில் அத்தனை பேர் தங்களை நோக்கிப் பாய்ந்து வருவதைக் கண்ட எதிரிகள் ஆயுதங்களைக் கீழே போட்டு விட்டனர். அவர்களைக் கைது செய்து அவர்கள் லாரியிலேயே ஏற்றி முகாமுக்கு அனுப்பி விட்டு, மூர்த்தி அந்தப் பெண் என்ன ஆனாள் என்று பார்க்கத் திரும்பிய போது, அவள் மூர்ச்சையாய்க் கிடப்பதைக் கண்டான்.

ஆறு மாதங்கள் ஆறு விநாடிகளாகக் கழிந்து சென்று விட்டன. இந்த ஆறு மாதங்களில் தான் என்னென்ன நிகழ்ந்து விட்டது. கடல் போன்ற பாலை வனத்தில் மட்டுமல்ல. மூர்த்தியின் மனக் கடலிலும் பலத்ததொரு புயல் அடித்து ஓய்ந்து விட்டது. ஆம், புயல் தான். அதுவும் எப்படிப்பட்ட புயல்.

மூர்த்தியை நாம் முதல் முதல் சந்தித்த அதே முகாம் ஆஸ்பத்திரிக்கு

வெளியே, அதே போன்று அமைதி நிலவும் பௌர்ணமை இரவில், கண்ணுக் கெட்டிய தூரம் வரை அலை மோதி நிற்கும் அதே மணற் பரப்பைப் பார்த்துக் கொண்டு, அவன் படுத்திருந்த போது, தன் மனத்தில் அடித்து ஓய்ந்த புயலைப் பற்றியே அவன் மனம் சிந்தித்துக் கொண்டிருந்தது. ஆயிற்று, இன்னும் ஒரு வாரத்தில் அவன் தாய் நாடு திரும்பப் போகிறான். ட்யூனிஸுக்காக நடந்த கடைசிப் போரில், அபாயமாகக் காயம் பட்டு ஆஸ்பத்திரியில் கிடந்த அவன், காயம் தெய்வாதீனமாக ஆறியதும் ஓய்வுக்காக இந்த ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வரப்பட்டிருந்தான். காப்டன் சங்கர் ரஜாவிலிருந்து திரும்பி, அந்த ஆஸ்பத்திரிக்கே வந்திருந்தார். அவருடைய சிபாரிசின் பேரிலேயே மூர்த்திக்கு லீவ் கிடைத்திருந்தது.

திரும்பி வரும்போது காப்டன் சங்கர், மூர்த்திக்குப் பத்மா கொடுத்தனுப்பி யிருந்த பதிலைக் கொண்டு வந்திருந்தார். யுத்தம் எப்போது முடியும், என்ற கடினமான கேள்வியைக் கேட்டிருந்தாள் பத்மா, அக் கடிதத்தில். பாவம், யுத்தம் முடியும் வரை தன் கணவனைப் பார்க்க முடியாது என்ற நிராசையே அவளை அக் கேள்வி கேட்கத் தூண்டி யிருந்தது. அதை எழுதும் போது அவள் மனம் என்ன பாடு பட்டிருக்கும்என்பதைக் கற்பனை செய்து பார்த்து, மூர்த்தியின் நெஞ்சு தழுதழுத்தது. ஆனால் அதே சமயம் அவள் எதிர் பாராத போது, திடுதிடுப்பென்று தான் போய் நின்றால் அவள் அடையும் குதூகலத்தை நினைத்துப் பார்த்து, அவன் மனம் மகிழ்ந்துகொண் டிருந்தான்.

பத்மாவின் கடிதம் அவளைப்பற்றிய எண்ணங்களை அவன் மனதில் மேலுக்குக் கொண்டு வந்தது என்பது உண்மையே. ஆனால் இப்போது அவனது ஹிருதய பீடத்தில் பத்மாவுக்கு மட்டும் இடமில்லை. அவளுக்கு சரிசமமாக இன்னொருத்தியும் இடம் பெற்றிருந்தாள். ஆம். பாலைவனத்தில் நடுவே இருண்ட தொரு இரவில் எதிரிகள் கையிலிருந்து விடுபட்டு மூர்ச்சையாய்க் கிடந்த அப் பெண்—காட்டில் மலர்ந்த ரோஜா லைலா—கண் காணாத மணற் பரப்பில் எங்கோ கிடந்த ஓர் வர்த்தகன் மகள் லைலா—மூர்த்தியின் மனத் திரையில் என்றும் மங்காத ஓவியமாய் விட்டாள்.

நிலவு பால் போல் காய்ந்து கொண்டிருந்தது. தூரத்தே ஓர் மணல் மேட்டின் மேல் கரிய நிழலாலாக்கப்பட்டது போல் தோன்றிய இரு பேரீச்ச மரங்களுடே சந்திரன் தன் முழுமுகத்தைப் பெருமையுடன் காட்டிக் கொண்டிருந்தான். இரவு வெகு நேரமாய்விட்டது. முகாம் கூடாரங்களிலிருந்து வந்து கொண்டிருந்த சிரிப்பொலியும் கேளிக்கைப் பாட்டுக்களும் அடங்கி விட்டன. அவரவர் ஆழ்ந்த உறக்கத்திலிருந்தனர். ஸெண்ட்ரியொருவன் உறக்கத்தை விரட்டியடிப்பதற்காகப் பாடிக் கொண்டிருந்த பஞ்சாபி நாட்டுப் பாட்டு, காற்றில் மிதந்து வந்து மூர்த்தியின் எண்ணங்களுக்குச் சுருதியா யமைந்திருந்தது. ஆறு மாதத்துக்கு முந்திய நிகழ்ச்சிகளை எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தது அவன் மனம்.

தனது இருதயவானில் துருவதாரகை போல் ஜொலித்துக் கொண்டிருக்கும் லைலாவை முதல்முதல் பார்த்த இரவு மூர்த்திக்கு நன்கு ஞாபகமிருந்தது. ஆனால் அன்று அவன் அவ்வளவு அலட்சியமாயிருந்து விட்டான். மூர்ச்சையாய்க் கிடந்த அவளுக்கு பிரக்ஞை வருவிக்கக்கூட அவன் முயலவில்லை. மணலில் புரண்டு கொண்டிருந்த அவளருகே குனிந்து பார்த்த இரு சிப்பாய்கள், 'பகத்பாபூ, கண்ட்ராக்டர் ஸாஹப் கீ பேடீ தோஹை' என்று கூவினர். கண்ட்ராக்டர் ஸாஹப் யாரென்ற அக்கரை மூர்த்திக்கு இல்லை. அவன் எண்ணமெல்லாம் பிடிபட்ட எதிரிகளின் மேலிருந்தது. அலட்சியமாக, அவள் தகப்பனரிடம் அவளைச் சேர்ப்பித்து விடச் சொல்லி விட்டு முகாமுக்குச் சென்று விட்டான். அதன் பிறகு மற்ற ஞாபகங்கள் அவளைப் பற்றிய நினைவை அமுக்கிவிட்டன.

ஆனால் அவ்வளவு லேசாக மறந்து விடக் கூடிய பெண் தான் இல்லை என்பதை லைலா நிரூபித்து விட்டாள். மூன்றாம் நாள் கூடாரத்துக்கு வெளியே, குதிரைக்காலடி கேட்டு பரபரப்புடன் வெளியே வந்த மூர்த்தி, உயர்ஜாதி அரபிக் குதிரை மீது அமர்ந்திருந்த லைலாவைப் பார்த்ததும் திகைத்து நின்று விட்டான். காற்றில் பறந்து கொண்டிருந்த அவளது பொன்னிறமான கேசம் அப்போதுதான் உதயமான சூரியனின் ஒளிபட்டுக் கண்ணைப் பறித்தது. ரோஜா நிறக் கன்னங்களில் புரண்டு கொண்டிருந்த கேசத்தை அலட்சியமாக ஒதுக்கி விட்டு விட்டு, ஒளிவீசும் தன் கரிய கண்களை மூர்த்தியின் மேல் வீசினாள் அப்பெண். பளிச்சிடும் வாளின் கூர்மையை மூர்த்தி அக்கண்களில் உணர்ந்தான்.

லைலா சிரித்தாள். 'என்னைத் தெரியவில்லை?' என்றாள். வாஸ்தவத்தில், அவள் யாராயிருக்கக்கூடும்

என்ற கற்பனையே மூர்த்தியின் மனதில் எழவில்லை. அவள் அவன் முன் தோன்றிய வேகத்தில் அவனது சிந்தனையே ஸ்தம்பித்து விட்டது.

சட்டென்று அவனது மனதை மறைத்திருந்த திரை நீங்கியது. ஆனால், அன்று இருண்ட இரவின் அமைதியைக் கிழித்துக் கொண்டு கூச்சலிட்டு, எதிரிகளிட மிருந்து திமிர முயற்சித்துக் கொண்டிருந்த அபலையே இந்த மோஹினி.

அவனது திகைப்பைப் பார்த்து லைலாவின் சிரிப்பு அதிகரித்தது. 'பயந்து விட்டாயா?' என்றாள் சிரிப்பினூடே.

மூர்த்தியும் சிரித்தான். அப் பெண்ணின் துணிச்சலை நினைத்து அவனுக்குத் தன்னை மீறிச் சிரிப்பு வந்தது.

'நீ எப்படி இங்கு வந்தாய்?' என்று கேட்டான்.

'என் தகப்பனார் அனுப்பினார்'.

'உன் தகப்பனாரா?'

'ஆம். என் தகப்பனாரை உனக்குத் தெரியாது. அவருக்கு உன்னைத் தெரியும்,' என்று கூறிக் கொண்டே லைலா குதிரையிலிருந்து குதித்தாள். 'லெப்டினன்ட் மூர்த்தி நீதானே?' என்று கேட்டாள் ஸ்வாதீனமாக. தன் பெயரை அவள் உச்சரிக்கும் விதத்தைப் பார்த்து மூர்த்தி சிரித்தான். அவள் ஹிந்துஸ்தானி பேசுவதே அவனுக்கு விசித்திரமாயிருந்தது.

'என் தகப்பனார் இன்னும் கொஞ்சநேரத்தில் வருவார்' என்று தெரிவித்துக் கொண்டே லைலா அவனருகே வந்தாள்.

'உனக்குப் பயமாயில்லை?' என்று கேட்டான் மூர்த்தி.

'ஏன்?'

'எதிரிகள் வந்துவிட்டால்?'

அவ்வளவுதான். கரிய கண்களில் ரௌத்ராகாரமான ஜொலிப்பு தோன்ற பைஜாமாவின் மடிப்பிலிருந்து கைத் துப்பாக்கியை எடுத்து நீட்டி, 'இது பதில்சொல்லும்' என்று பளிச்சென்று பதில் கூறினாள்.

மறுகணம் அவளது செவ்விதழ்களில் மீண்டும் சிரிப்புத் தவழ்ந்தது. 'அன்று இது என் கையில் இல்லை. என்று கூறிக் கொண்டே கைத்துப்பாக்கியை இடையில் செருகி விட்டு அவன் காலடியில் உட்கார்ந்து விட்டாள்.

தன் தேசத்தைப் பற்றிய வர்ணனையில் ஈடுபடவேண்டிய நிர்ப்பந்தம் மூர்த்திக்கு ஏற்படவில்லை. உட்கார்ந்த மறுகணமே குதித்தெழுந்தாள். தூரத்தே எங்கோ வந்து கொண்டிருந்த குதிரையின் காலடி சப்தத்தை அவள் காது கிரகித்து விட்டது.

'ஸலாம், பகத்பாபூ' என்று கூறிக் கொண்டே குதிரையிலிருந்து இறங்கினான் லைலாவின் தகப்பனார். அவன் அருகில் வந்ததுமே மூர்த்தி அவனை அடையாளம் கண்டு கொண்டு விட்டான். கைரோவிலிருந்து ஸப்ளை கண்ட்ராக்டராக தன் டிவிஷனைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த அவனை மூர்த்தி அடிக்கடி பார்த்திருக்கிறான். தன்னுடன் தன் மகளையும் அவன் அழைத்து வருகிறான், என்று மூர்த்திக்கு எப்படித் தெரியும்.

அந்தப் பாலைவன வியாபாரியின் மனதில் பொங்கிக் கொண்டிருந்த பித்ரு வாத்ஸல்யம் மூர்த்திக்குப் புதுமையாயிருந்தது. கரடு முரடான அவனது தோற்றத்துக்குள்ளே இவ்வளவு மென்மையான இருதயம் இருக்க முடியுமா என்று அவன் அதிசயித்தான். தாயையிழந்த லைலாவைப் பற்றிக் கூறும் போது அந்த முரட்டு அராபியனது குரல் கம்மியிருந்தது. கண்கள் ததும்பி நின்றன. லைலாவோ தன் தந்தையின் தோளில் உரிமையுடன் சாய்ந்து கொண்டிருந்தாள். மூர்த்திக்கு ஒரு யோசனை தோன்றியது. சட்டென்று உள்ளிருந்த காமிராவை எடுத்து வந்து இருவரையும் அந்நிலையில் போட்டோ பிடித்து விட்டான்.

லைலாவுக்கு ஒரே உற்சாகம். பாய்ந்தோடி வந்து 'எனக்குக் கொடு, எனக்குக் கொடு' என்று மூர்த்தியின் கையிலிருந்த காமிராவைப் பிடுங்க முயற்சித்தாள். மறுநாள் தருவதாக மூர்த்தி வாக்களித்த பின்புதான் அவள் மனம் சமாதானமடைந்தது.

மறுநாள் அதே நேரத்துக்கு லைலா மூர்த்தியின் கூடாரத்துக்கு வந்து விட்டாள். வாஸ்தவத்தில் அவள் வராதிருந்தால் மூர்த்தி ஏமாற்றமடைந்திருப்பான்.—ஆம், அவனையறியாமல் லைலாவின்மேல் ஒரு பாசம் அவன் மனதில் வந்து புகுந்துவிட்டது. பெயர் சொல்ல முடியாத பாசம் அது. ஆனால், பத்மாவின்மேல் அவன் கொண்டிருந்த பாசத்திற்கும் இதற்கும் எவ்வளவு வித்யாசம்.

தன் போட்டோவைக் கையில் வாங்கிப் பார்த்ததும் லைலாவின் கண்கள் ஆச்சரியத்தால் அகன்றன. 'நான் இவ்வளவு அழகாகவா இருக்கிறேன்' என்றாள். பின்பு, 'நீயும் தான் அழகாயிருக்கிறாய்' என்று கூறிச் சிரித்தாள். இந்த வார்த்தைகளை அவள் கூறிய தோரணை அழகாயிருப்பது குற்றம் என்று சொல்வதுபோல் இருந்தது. சட்டென்று லைலா ஏதோ நினைத்துக் கொண்டவள் போல் போட்டாவைக் கையில் எடுத்துக் கொண்டு வெளியே ஓடிக் குதிரை மேல் ஏறிக் கொண்டாள். 'அப்பாவுக்குக் காட்ட வேண்டும்' என்று கூறிக் குதிரையைத் தட்டி விட்டாள்.

கனவு போன்ற இந்த நிகழ்ச்சிகளை இப்போது எண்ணிப் பார்க்கும் போது, மூர்த்தியின் மனதில் எல்மட்ருவைச் சுற்றியுள்ள காட்சிகள் ஞாபகம் வந்தன. அந்தச் சுனையும், அதைச்சுற்றி பச்சைப் பசேலென்று வளர்ந்திருந்த பேரீச்சை மரங்களும் ஞாபகம் வந்தன. அந்த மரங்களுக்கிடையே கம்பீரமாய் நின்ற அந்தப் பழைய வீடு ஞாபகத்திற்கு வந்தது. எல்லாவற்றுக்கும் மேல் அந்த கிராமத்தில், அந்தச் சுனையருகே, அந்த மரங்களிடையில், அப்பழைய கல்கட்டிடத்துக்கு முன் அமைக்கப்பட்டிருந்த, அக்கருங்கல் மேடையில் உட்கார்ந்து கழித்த கடைசி தினம், அவன் ஞாபகத்துக்கு வந்தது. அதற்கு முன் மற்ற நாட்கள் மங்கலாகத் தோன்றி மறைந்து விட்டன.

அக்கருங்கல் மேடையில் அந்தச் சுனையைப் பார்த்து உட்கார்ந்து கொண்டு எத்தனையோ நாட்களை அவன் கழித்திருந்தான். எல்மட்ருவைச் சுற்றி எதிரி நடமாட்டம் நின்று போயும் வேறிடத்துக்கு வரும்படி உத்தரவு வராத நிலையில்

லலாவின் சிரிப்பும் பேச்சும் அவனுக்கு நிதி கிடைத்தது போன்றிருந்தன. ஆனல் அக்கடைசி தினம்..........

இப்போது நினைத்துப் பார்க்கும் போது மூர்த்திக்கு எல்லாம் விளங்கியது. ஆனல் அப்போது ஏனே அதை அறிந்து கொள்ளும் சக்தி அவனுக்கு இல்லாமற் போயிற்று. ஆம், தெள்ளிய மலையருவி போல பிரவாகித்த அந்தச் சிரிப்பிலும் பேச்சிலும், எங்கோ தேக்கம் தட்டியதை அவன் கண்டு கொள்ளவில்லை.

ஆனல் அன்று, கருங்கல் மேடையில் அவனருகே வந்து உட்கார்ந்து திடுதிப் பென்று 'என்னை நீ நேசிக்கிருயா?' என்று அவள் கேட்ட போது மூர்த்திக்கு என்ன சொல்வது என்றே புரியவில்லை.

அவனது திகைப்பைக் கண்டதும் தன் மோகனச் சிரிப் பொன்று சிரித்தாள் லலா· அதுதான் அவள் வசீகரம். நாகரிகம் அவளை இன்னும் கெடுக்கவில்லை. திடுக்கிடும் வகையில் கபட மற்றவளாயினும் பிடிவாதக்காரி—நினைத்தது நிறைவேற வேணும். இரு கைகளையும் முஷ்டி பிடித்து, பல்லைக் கடித்துக் கொண்டு 'நான் உன்னை நேசிக்கும் அளவு நீ நேசிக்கா விட்டால்......' என்று, எப்படி வேண்டுமானலும் அர்த்தம் செய்து கொள்ளக் கூடிய வாறு பேசினள். பின்பு தட்டென்று கீழே உட்கார்ந்து இரு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு விம்மினள். இவ்வளவும் கண் மூடித் திறப்பதற்குள் நிகழ்ந்து விட்டது.

மூர்த்தி கருங்கல் மேடையில் கற்சிலைபோல் அசைவற்று உட்கார்ந்திருந்தான். அந்தப் பெண்ணின் உத்வேகச் சுழலில் சிக்கி அவனது அறிவே ஸ்தம்பித்து விட்டது.

நல்ல வேளையாக அங்கு அவனைத் தேடிவந்த எக்ஸ்பிரஸ் மெஸன்ஜர் மூர்த்தியை இக்கட்டான நிலைமையிலிருந்து காப்பாற்றினன். மாரத் பகுதிக்கு வரும்படி மூர்த்திக்கு உத்தரவு வந்திருந்தது.

மெஸன்ஜர் வந்ததும் லலா கண நேரத்தில் பழய லலாவாக ஆய்விட்டாள். அவள் கண்களிலிருந்த கண்ணீர் எங்கோ மறைந்து விட்டது. உதட்டில் மறைந்த சிரிப்பு எங்கிருந்தோ திரும்பிவிட்டது. உத்தரவை மூர்த்தியின் கையிலிருந்து பிடுங்கிப் பார்த்து ஒன்றும் புரியாமல் அவனைப் பார்த்தாள்.

'சண்டைக்குப் போகவேண்டும், லலா' என்று மூர்த்தி விவரித்தான்.

"எப்போது?"

"நாளைக்கே"

"போய்வா. திரும்பி வந்து எனக்கு விடை யளிக்கலாம். நாம் எப்படியும் மீண்டும் சந்திப்போம்" என்ருள்.—அன்று அவள் கூறிய மொழிகள் எவ்வளவு கொடிய விதத்தில் பலித்து விட்டன!..........

கூடாரத்தை ஊடுருவி அடித்த காற்று துக்கத்தோடு முனகுவது போலிருந்தது. மூர்த்தியின் சிந்தனைப் போக்கை அறிந்தவன் போல் ஸந்தரி துயரமானதொரு மெட்டில் பாட ஆரம்பித்து விட்டான். காற்ருல் அலைக்கப்பட்ட அந்த கீதம் மெட்டின் துயரத்தையும் மிஞ்சித் தொனித்தது.

போர்முனைகளின் கெடுபிடியையும் குமுறல்களையும், உற்சாகத்தையும் ஏமாற்றத்தையும் எல்லாம் தாண்டி மூர்த்தியின் மனம் அந்தப் பெரும் புயலைப்பற்றியே சிந்தனை செய்து கொண்டிருந்தது. அவனது மனக்கடலில் அடித்த புயல் போர்க் கடலில் அடித்த புயலையும் மிஞ்சியதாயிருந்தது.

எதிரி ஓடிக் கொண்டிருந்தான். தப்பினல் போதும் என்ற எண்ணத்துடன் ஓடிக்கொண்டிருந்தான். ஒரு இடத்திலேனும் அவன் கால் தரிக்க முடியாமல் செய்துகொண்டிருந்தன நேசப்படைகள். ஆனல் எதிரி கப்பலேறி விடாமல் பார்த்துக்கொள்வதும் பெரிய பொறுப்பாயிருந்தது.

கைருவான் பகுதியில் சிதறிக் கிடந்த எதிரிகளை வளைத்துக்கொள்வதற்காக அனுப்பப்பட்ட ஒருபடை மூர்த்தின் தலைமையில் இருந்தது. குன்றுகள் நிறைந்த அந்தப் பிரதேசத்தில் எதிரிகளைத்தேடி அலைந்து கொண்டிருந்தான் மூர்த்தி.

ஒரு குன்றின்மேல் மூர்த்தியும் அவன் ஆட்களும் ஏறிக்கொண்டிருந்தனர். கரடுமுரடான அந்தக் குன்றில் ஏறுவது சிரமமாகத்தான் இருந்தது. ஆனல் அவர்களது மனதில் நிரம்பியிருந்த உற்சாகம் சிரமத்தை மறக்கடிப்பதாயிருந்தது.

குன்றின் உச்சியை அடைந்ததும் ஓர் விசித்திரமான கூச்சல் மூர்த்தியைத் திகைக்க வைத்தது. மறு கணம் குன்றின் மறுபுரத்திலிருந்து ஒரு குதிரை தன்னை நோக்கி அதிவேகமாய் வந்துகொண்டிருப்பதைக் கண்டான். நொடிப்பொழுதில் விஷயம்புரிந்துவிட்டது மூர்த்திக்கு. பல தடவை பார்த்த அந்தக்குதிரையை அடையாளம் கண்டுகொள்வது சிரமமாயில்லை. லலாவே அவ்வளவு வேகத்தில் வந்துகொண்டிருந்தாள். 'நாம் மீண்டும் சந்திப்போம்' என்று அவள் கூறிய வார்த்தைகள் மின்னல்போல் ஞாபகத்திற்கு வந்தன.

'லலா, லலா' என்று பதட்டத்துடன் கூவினன் மூர்த்தி.

அவனது பதட்டத்தை லலா கவனிக்கவில்லை. அவனைக் கண்டு பிடித்த ஆனந்தத்தில் அவளுக்கு மற்றதொன்றும் பெரிதாயில்லை.

'லலா, இங்கு எங்கு வந்தாய்? எப்படி வந்தாய்?' என்று திகிலுடன் மூர்த்தி கேட்டான்.

'உன்னைத் தேடி வந்தேன், உன்னைக் கண்டேன்' என்று சிரித்தாள் லலா.—மீண்டும் அந்த கபடமற்ற மோகனச் சிரிப்பு.

அவள் சிரிப்பு மூர்த்தியின் நெஞ்சைப் பிளப்பதாயிருந்தது. 'லலா, போய்விடு, போய்விடு' என்று கூறினன்.

'நேற்றிரவு தான் நானும் அப்பாவும் இங்கு வந்தோம். காலையிலிருந்து உன்னைத் தேடிக்கொண்டிருக்கிறேன். கண்டு பிடித்து விட்டேன். நான் போகமாட்டேன். உன் கூடத்தான் வருவேன்' என்று மீண்டும் சிரித்தாள்.

'எந்த நிமிஷமும் எதிரி வந்துவிடுவான். எந்த நிமிஷமும் ஆபத்து' என்று பதறினன் மூர்த்தி.

'ஆபத்து எனக்கு மட்டுந்தானு?' என்ருள் லலா. பின்பு, 'என்னையும் கூட அழைத்துப் போ. எனக்கு பயமில்லை. இதோ பார்' என்று கூறிக்கொண்டே இடையி லிருந்த கைத்துப்பாக்கியைக் கையிலெடுத்துக் கொண்டாள்.

மறுகணம், 'எதிரி, எதிரி' என்று கூச்சல் எழுந்தது. கூச்சலோடு கூச்சலாக வெடிச் சப்தமும் காதைத் துளைத்தது. 'லைலா ஓடு, ஓடு,' என்று கூறிக்கொண்டே எதிரியை நோக்கிப் பாய்ந்தான் மூர்த்தி. ஆனால் லைலா அவன் வார்த்தையை லக்ஷ்யம் செய்யவில்லை.

கொஞ்ச நேரத்துக்கு என்ன நேர்ந்ததென்ற நினைவே மூர்த்திக்கு இல்லை. சிப்பாய்களின் கூச்சலும், வெடிச் சத்தமும், எங்கும் சூழ்ந்த புகையும் அவன் மனத்தில் வெறியை மூட்டி விட்டது. அந்த வெறி தணிந்த போது ஒரு எதிரி தன்னைக் குறி பார்த்துச் சுடத் தயாராயிருப்பதை அவன் கண்டான். அதே சமயம் 'ஆ' என்று கதறிக் கொண்டு லைலா அவன் முன் பாய்ந்தாள். அவள் கைத்துப்பாக்கி வெடித்து எதிரியின் மேல் பாய்ந்தது. ஆனால் மறு கணம் எதிரி குறி வைத்துச் சுட்டது அவள் மேல் பாய்ந்து விட்டது. மூர்த்தி அவளைத் தாங்கிக் கொள்வதற்குள் அவளது மென்மையான தேகம் கரடு முரடான தரையில் சாய்ந்துவிட்டது.

'லைலா, லைலா' என்று கண்ணீருகுத்துக்கொண்டே அவளை எடுத்துத் தன் மார்பில் கிடத்திக் கொண்டான் மூர்த்தி. குண்டு அவள் மார்பில் பாய்ந்திருந்தது. ஆனால் அந்நிலையிலும் அவள் இதழ்களில் தவழ்ந்து கொண்டிருந்த புன்னகை மறையவில்லை.

'லைலா' என்று கூறி அதற்கு மேல் ஒன்றும் கூறமுடியாமல் முகத்தை மூடிக்கொண்டான் மூர்த்தி.

லைலா தன் துவண்ட கைகளை உயர்த்தி மூர்த்தியின் முகத்தைத் தடவினாள். கண்ணீர் கையில் பட்டதும், 'எனக்கா இந்தக் கண்ணீர்' என்று கேட்டுக் கொண்டே அவன் கழுத்தைக் கட்டிக் கொண்டாள்.

ஒவ்வொரு கணமும் அவள் உயிரைக் குடித்துக் கொண்டிருந்தது. சோர்ந்த குரலில் லைலா, 'இப்பொழுது சொல், என்னை எவ்வளவு நேசிக்கிறாயென்று. நான் உயிருடனிருந்தால், உயிருடனிருந்தால்... என்னை...... என்னை......' என்று ஆரம்பித்தாள். அந்த வாக்கியத்தை முடிக்க அவளுக்கு வலுவில்லை. ஆனால் மூர்த்திக்குப் புரியாமலென்ன? ஒரு நிமிஷம் தயங்கினான். என்ன சொல்வதென்று தெரியாமல் திகைத்தான். ஆனால் ஒரு நிமிஷத்திற்குத்தான். கண்ணீர் ஆறாய்ப் பெருகி ஓட, சிரிக்க முயன்றான். பேச வாயெழவில்லை. 'கட்டாயம். உன்னை நான் மணம் புரிந்து கொண்டிருப்பேன்' என்று பேசாமல் உரைத்தான். தலையசைத்து உணர்த்தினான்.

லைலாவின் இதழ்களில் தெய்வீகப் புன்னகை தவழ்ந்தது. மறுகணம் அவள் உடல் துவண்டு விழுந்து விட்டது. ...............

ஆம்; எவ்வளவு பெரிய பொய் அது. ஆனால் அதனால் புனிதமான ஓர் ஆத்மா சாந்தியடைந்தது. பத்மா கட்டாயம் புரிந்து கொள்வாள்.

* * *

'மூர்த்தி, இன்னுமா விழித்துக் கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டுக் கொண்டே காப்டன் சங்கர் வந்ததும் தான் மூர்த்தியின் கனவு கலைந்தது. கண்ணீரை விழுங்கி விட்டு 'பழைய நாட்களின் நினைவு—தூக்கம் வரவில்லை' என்றான்.

'சீக்கிரம் பத்மாவைப் பார்க்கப் போகிறாயல்லவா? பழைய நினைவுகள் வாட்டத்தான் செய்யும்' என்று கூறிக் கொண்டே அவனது கன்னத்தை அன்புடன் கிள்ளிவிட்டு காப்டன் ஒரு நோயாளியைக் கவனிக்கச் சென்று விட்டார்.

கண்ணீர் பொங்கும் கண்களுடன் எதிரே தோன்றிய மணற்பரப்பைப் பார்த்துக் கொண்டிருந்தான் மூர்த்தி. காற்று இன்னும் அதிக துக்கத்துடன் முனகியது. கண்ணுக்கெட்டிய தூரம்வரை வெண் மணற்பரப்பு ஏறி இறங்கி நெளிந்தோடும் நிலத் தோற்றம். மங்கிய நிலவு. தூரத்தில் கூடாரங்கள் வரிசைவரிசையாக காற்றில் அசைந்த வண்ணமாய் உறங்கிக் கொண்டிருந்தன. எங்கும் சாந்தாகாரமான மௌனம் பாலைவனத்தில் இரவு.

# இன்ப கீதம்

ஸ்ரீ. வேணுகோபால்

ஒரு நாள்,

குற்றால மலைச் சாரலில்....,

நிர்மலமான நீல வானத்திடை நிலவு நங்கை பவனி வந்துகொண்டிருந்தாள்.

மெத்தன மேல் காற்று மெல்லத் தழுவிச் சென்று கொண்டிருந்தது.

அவ் வமயம் ...

சிந்தனைச் சிற்ப மேடையில் நினைவுத் திரை மெதுவாக விலகியது

அங்கு ...........

ஒரு பொற் பாறை, சலசலவென ஒலித்துக் கொண்டு ஓடும் சிற்றோடையின் கரையில், காட்சியளித்தது.

மகிழ மரமும், செண்பகச் செடியும் பூத்துச் செறிந்தது.

பூக்கள் ஸ்வர்ணக் கட்டிலில் ரத்ன மிழைத்தன.

புஷ்பங்கள் பரிமள கந்தம் வீசின.

மனத்தைக் குழைத்தது, காட்சியும், ஓடையின் ஓசையும்.

........................

சலங்கையின் சப்தம்.

வளையொலியும், பின் தொடர்ந்தது

மங்கை யொருத்தி; மயிலில்லை, அன்னமில்லை; நடந்து வந்தாள்.

மாசற்ற முகம்.

சிற்றுடல், சிருஷ்டித் தேவனல் அழகுக் கல்லில் குடைந்தெடுத்த சிற்பம்.

சிற்ப மேனியின் அழகை அதிகப் படுத்த அமைந்தது அவ்விரு இன்ப உறுப்புகள்.

மாதுளைப் பழம் போல படர்ந்திருந்த கொங்கைகள், பவளமல்லிகைப் பூவைப் போல் மலர்ந்திருந்தன.

மார்பகங்களிரண்டும், மங்கையின் மனயெழுச்சிகளை வெளியிடத்துடித்துக்கொண்டிருந்தன, சில விர்மல்களில்.

இடையிலே துவண்டு கிடந்தது இடை.

காலின் தண்டையின் நாதமும் கையின் கங்கண ஒலியும், அவள் வருகையை அறிமுகப் படுத்தின.

வந்தாள்......

ஓங்கி வளர்ந்திருந்த மரங்கள் கும்பிட்ட மைத்தன.

ஓடும் நதி நின்று பருகியது அவளழகை

திகைத்தன யாவும்; பிரமித்தாள் இயற்கை யன்னை.

பாவை நடந்து நெருங்கினள் பொற் பாறையை.

கனக நிறக் கட்டிலில் கமழ் மணம் வீசும் பூக்களிடையே மனமிழந்தாள்.

பாறையைப் பற்றி அமர்ந்தாள்.

அப்பொழுது........

சில்லென்று காற்று சிரித்துச்சென்றுகொண்டிருந்தது.

அவள் சிறுமி.

பசும் நிறப் புல்லை யொத்தது, பாவை யுடுத்தியிருந்த பட்டாடை.

பச்சை நிறப் பாவை, பாறையில் வீற்றிருந்த காட்சி............

மரகத வீணையொன்று தங்கத் தரையில் வைத்திருப்பது போலிருந்தது.

வீணை ..............

வனப்பு தேவதையும் வண்ண தேவனும் கண்டார்கள்.

அழகுத் தெய்வம் நோக்கியது.

சௌந்தர்ய ரூபணியும் சற்றே கவனித்தாள்.

வீணை........ஒன்றையும் கவனிக்கவில்லை.

விரைந்தோடினர்கள் வீணையிடம்.......

வனப்பு தேவதை பசப்பு நிறமிட்டது.

வண்ணத் தேவன் வீணையை வருடி நாணக் கம்பிகளைக் கோர்த்தான்.

அழகுத் தெய்வம் கானக் குயிலுடன் அறிமுகம் செய்தது

சௌந்தர்ய ரூபணி சுருதி கூட்டினுள்.

வீணை தயாராகி விட்டது.

பார்த்தாள் பருவகன்னி.

பருவகன்னி வீணையுடன் கலந்து பண்ணிசைத்தாள்.

"டிங்......டிங்......டிங்......"

காலம் மாறிவிட்டது.

யாழின் ஒலியிலே இசைராணி நர்த்தனம் செய்தாள்.

உற்று நோக்கினேன்.

சிற்றோடைக் கரையின், கனகப்பாறையிலே என் பார்வை சென்றது.

சிறுமியைக் காணேம்.

குறும்பை அள்ளி வீசிய கண்கள் நாணத்தால் கவிழ்ந்திருந்தன.

துள்ளிக் குதித்த அவயவங்கள் யாவும் வெட்கத்தால் துவண்டு கிடந்தன.

மகிழ்ச்சி ததும்பி வழிந்த மதிமுகம், அர்த்த புஷ்டியுடன் அசைவற்று குளிர்ந்திருந்தது.

ஆரணங்கு ஒருத்தி அமர்ந்திருந்தாள்.

மங்கையின் பட்டாடைக்குள் மறைந்துவிட்டாள் பருவகன்னி.

பார்த்து நின்றேன்.

குழலை எடுத்தேன் . . . .

கொவ்வைச் செவ் வாயை முத்தமிட்டது குழல்............

குழல் ஊதியது.

வீணையொலியை குழலோசை நெருங்கித் தழுவியது.

இரண்டறக் கலந்தன இரண்டும்.

இன்பகீதம் சாரலெங்கும் தழுவியது

விலகிய திரை வீழ்ந்தது.

ஒரு சித்திரம்.

அழகியமலரில் தேனீ ஒன்று தேன் பருகிக் கொண்டிருந்தது.

# நியாயமா?

ஸி. கே. சாவித்ரி

மாலை ஆறு மணி. அந்த அறையைச் சுற்றிலும் இருள் கவிந்துக் கொண்டு இருந்தது. அறையில் எரிந்த சிவப்பு விளக்கு, தரையில் பரப்பியிருந்த ரத்னக் கம்பளத்தின் மீது வீசிக்கொண்டு இருந்தது. அவ் விளக்கின் அருகில் இருந்த ஒரு சிறு ஸ்டூல்; அதன்மேல் வைக்கப்பட்டிருந்த ஒரு வெள்ளை நிற பீங்கான் டீ செட் — இவையும் அவ்வொளி வட்டாரத்திற்கு இலக்காகி சிவந்த ஒளியில் திகழ்ந்தன. அருகில் இருந்த ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்தவாறு அமர்ந்திருந்தார் பிரபல நீதிபதி முகம்மது ஷெரீப்கான்.

அவருக்கு சுமார் ஐம்பது வயதிருக்கும். எளிய உடைகள் அணிந்திருந்த போதிலும், அவர் தோற்றம் கம்பீரமாக இருந்தது. வயதின் காரணத்தால் அவர் தலை நரைத்துப் போய் இருந்தது. சாந்தம் நிரம்பிய போதிலும், இரண்டு மூன்று மாதங்களாக ஏற்பட்ட கொடுமைகளால் அவர் முகத்தில் கவலை குடி கொண்டிருந்தது.

அவர் மனம் பலவித யோசனைகளில் நிரம்பியிருந்தது. இரண்டு மாதங்களுக்கு முன் மனைவியும் மக்களுமாக கலகல வென்று இருந்த அவருடைய பிரம்மாண்டமான வீட்டில், இன்று தானும் தன்னுடைய ஒரே தம்பியும் மிஞ்சி, அந்தகாரம் சூழ்ந்து கொண்டு இருப்பதை எண்ணி பெருமூச்சு விட்டார். அவர் இருக்கும் ஊரில் கலவரம் அடங்கியிருந்தபடியால், குற்றவாளிகளை கண்டு பிடித்து அவர்களைத் தண்டிக்க முயல்வதில் தான் ஈடுபட்டு இருப்பதை எண்ணும்பொழுது அவருக்கு தன்னையறியாமல் சிரிப்பு வந்தது. இந்திய மக்கள் ஏன் இவ்வாறு படுகுழியில் வீழ்கிருர்கள் என்று ஆராய்வதில் அவர் மனம் ஈடுபட்டது.

அப்பொழுது, 'தடதட' வென்று கதவைத்தட்டும் சப்தம் அவர் சிந்தனையைக் கலைத்தது. கொலைகாரன் எவனையாவது பிடித்து இழுத்துக் கொண்டு வந்திருப்பார்கள் என்று அசிரத்தையாக எழுந்து சென்று கதவைத் திறந்தார். திறந்தவர் அப்படியே திடுக்கிட்டுப் போய் நின்றூர். எதிரே கையில் கத்தியைப் பிடித்தவாறு, தலைவிரிக் கோலமாக நிற்பது யார்? குழம்பிய மனத்துடன், தழுதழுத்தக் குரலில் 'தம்பி! இதென்ன நீ கூடவா இந்த அந்தகாரத்தில் இறங்கினுய்?" என்று கேட்டார்.

ஆனல், அவனே ஏதோ ஒரு வீரச் செயலைச் செய்தவன்போல் கம்பீரமாக நின்றூன். தன் அண்ணவை மேலே பேசவிடாமல், படபடவென்ற குரலில் மூச்சு விடாமல் கூறலானன்: "அண்ணு, நான் இரும்புக் கடை முதலாளி இஸ்மெயில் கான் அவர்களைத் தான் கொன்றேன். ஆனல், நான் அதை வேண்டு மென்றே செய்யவில்லை. அந்த பாபி ஒரு இந்தியப் பெண்ணின் கற்பை அழிக்க முயன்ருன். ஆகையால் அவள் அந்தப் பாதகனைக் கொல்ல விரும்பினள். ஆனல் அவளுக்கு தைரியமில்லை. என் உதவியை வேண்டினள். ஆகையால் நான் அவனை ஒரே குத்தில் முடித்து விட்டேன். அதற்கு சாட்சி இதோ இந்தக்கத்தியும்அதிலிருந்துசொட்டு சொட்டாக விழும் ரத்தமும்தான். அண்ணு தாங்கள் எனக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருக்கிறீர்கள். வெட்கத்தை விட்டுக் கூறுகிறேன். நான், நான் அவளைக்காதலிக்கிறேன். அவளும் என்னைக் காதலிக்கிருள். நானும் அவளும் இறந்தாலும் ஒரே சமயத்தில் இறப்பதாக தீர்மானம் செய்து கொண்டு இருக்கிருேம். நாளைக்கு குற்றம் வெளியாகி குற்றவாளியைக் கண்டு பிடித்து விடுவார்கள். ஆனல் அவள் கதி! அவள் குரூரத்தன்மை நிறைந்த இவ்வுலகத்தில் தனியாகவல்லவா இருக்க வேண்டும்; அண்ணு! எங்களைக்காப்பாற்றுங்கள். காப்பாற்றுங்கள்" என்று கூறி கைகள் இரண்டையும் கூப்பினன்.

கீழே விழுந்த 'டங்' என்ற கத்தியின் ஓசையைக் கேட்டு திடுக்கிட்டு தலை நிமிர்ந்தார். அவர் மனத்தில் யோசனை அலைகள் வீச ஆரம்பித்தது. தம்பியைக் காப்பாற்றுவது கடமை. ஆனல் நியாயம்? நியாயம் பெரிது. உன்னை நம்பியிருக்கும் உன் தம்பியைக் காப்பாற்றுவது உன் கடமையல்லவா! ஆனல் கடமையைக் காட்டிலும் பெரிதாக வேறென்று இருக்கிறதே. அது தான் உன் கௌரவம். நீ உன் தம்பியைக் காப்பாற்ரு விடில், களங்கமற்ற உன் பெயர், இத்தனை நாள் காப்பாற்றி வந்த உன் கௌரவம் எல்லாவற்றிற்கும் ஹானி ஏற்படும். உன் தொழில், கண்யமான, அப்பழுக்கற்ற, ஒழுங்கு தவருத உறுதியான தொழில். உன் தம்பியைக் காப்பாற்றுவதின் மூலம் அவைகளையும் காப்பாற்று. நாளைக்கு விஷயம் வெளியே வந்தால் உன் பெயருக்கு அவமானம். கண்யமான உன் குடும்பத்திற்கே அவமானம் என்று போதித்தது மற்றொரு மனம்.

நியாயத்தை விட்டு விட்டு, பாசத்தையும் கட்டுப்படுத்தி, கௌரவத்தின் முன்பு தலைகுனிந்தார் ஷெரிப்கான்.

தன் தம்பியை நோக்கி, "ரஷித் நீ கவலைப்படாதே; நான் மேலே கவனித்துக் கொள்கிறேன். ஆனல் நீ நாளைவரைக்கும் வீட்டை விட்டு எங்கும் வெளியில் போகாதே" என்று கூறினர்.

## 2

மறுநாள் மாலை பேபர் விற்கும் ஒரு பையனிட மிருந்து இரண்டணு கொடுத்து ஒரு பேபர் வாங்கினர். முதல் பக்கத்தைப் பார்த்தவுடன் அவர் பெருமூச்சுவிட்டார். 'பிரபல இரும்பு வியாபாரி இஸ்மெயில்கானை கொலை செய்த குற்றத்திற்காக மூன்று நபர்கள், ஜோத் சிங்கும் அவனுடைய 14-வயதும் 12-வயதுமான இரு புத்திரர்களும் கைது செய்யப்

பட்டுள்ளார். கைதிகள், தாங்கள் வறுமைப் பேயினுல் பிணம் என்றும் பாராமல் உடைகளைக் குடைந்ததாக வும் தாங்கள் நிரபராதிகள் என்றும் கூறுகிருர்கள். தீர்ப்புநாளைக்கு காலை பத்து மணிக்கு ஷெரிப்கான் தலை மையில் வெளியிடப்படும்.'

இதைப் படித்தவுடன் அவர் மனம் சஞ்சலமுற்றது. ஒருவன் குற்றத் திற்காக குற்றமற்ற மூன்று பேர் பலியா? ஆம்! அவர்கள் கூறுவது உண்மைதான். கேவலம் வறுமை என்னும் பேயினுல் தூண்டப்பட்டு, பிணம் என்றும் பாராமல் அவர்கள் உடைகளைக் குடைந்திருக்கிருர்கள். சீ! என் பெயரைக் காப்பாற்ற என்ன நீசமான காரியத்தில் இறங்கி னேன்? நான் இப்பொழுதே போய் அவர்களை விடுவிக்கட்டுமா? ஆனுல் சொந்த தம்பிக்கு துரோகமா? பிறகு என் பெயர், கௌரவம்? மனி தன் இறந்தால் அவன் மறு ஜென் மம் எடுக்கிருன்; ஆனுல் இழந்த கௌரவத்தை மீண்டும் பெறுவது எப்படி? வேண்டாம்! நடப்பது நடந்தே தீரட்டும். உலகத்தில் தினம் அநேக மனிதர்கள் இறக் கின்றனர். அவர்களைப்போல் ஜோத் சிங்கும் இறக்கட்டும். என் தம்பிக்கு பணம் கொடுத்து அவனை இங்கி ருந்து வெளியேற்றி விடுகிறேன். அவனுவது தனக்கு பிரியமானவளை மணந்து சுகமாக இருக்கட்டும் என்று தீர்மானம் செய்து கொண் டார். தன் கௌரவத்தைக் காப் பாற்ற தான் இறங்கியிருக்கும் நீச மான காரியத்தைப் பற்றியும், அத னுல் ஏற்படப் போகும் பலவித இன் னல்களைப் பற்றியும் யோசித்தவாறு குழம்பிய மனதுடன் வீடு திரும்பிச் சென்ருர் ஷெரீப்கான்.

## 3

ஷெரீப்கான் வீட்டை அடைந்த வுடன், அங்கிருந்த வேலைக்கா ரன், அவருடைய தம்பி ஒரு பெண்ணை அழைத்துக் கொண்டு வந்ததாகத் தெரிவித்தான். உடனே அவனை, பார்க்கும்பொருட்டு அவசர அவசரமாக உள்ளே சென்ருர்.

அவருடைய காலடியைக் கேட்ட வுடன் ஹாலில் உட்கார்ந்திருந்த ஒரு ஸ்திரீ எழுந்து நின்று அவரை நோக்கி கைகூப்பினுள். எதிர்பாரா மல் அந்தப்பெண்ணுடன் ஏற்பட்ட சந்திப்பு அவரைத் திடுக்கிடச் செய் தது. அவளுக்கு சுமார் முப்பத் தைந்து வயது இருக்கும். அவள் உடை, ஒரு சீக்கியப் பெண் என்று அறிவித்தது. கூந்தல் அலங்கோல மாகப் புரண்டு கொண்டிருந்தது. அகன்ற அவள் விழிகளில் ஏக்கம் நிரம்பியிருந்தது.

அவள் பேசலானுள். "ஐயா! என் கணவரையும் மக்களையும் காப் பாற்றுங்கள்" என்று கூறுவதற்குள் துக்கம் அடைத்துக்கொண்டு ஒரு குழந்தையைப்போல் அழ ஆரம்பித் தாள்.

ஷெரிப்கானுக்கு எல்லாம் புரிந்து விட்டது. கைது செய்யப்பட்டிருக் கும் ஜோத்சிங்கின் மனைவி தன் கண வனது உயிருக்காக மன்ருடுகிருள். பிறகு அவர், "அம்மணி! நான் என் னுல் முடிந்தவரை செய்கிறேன். ஆனுல் தகுந்த சாட்சியம் கிடைக்க வில்லையே. தகுந்த சாட்சியம் கிடைக் காவிடில் தண்டித்துத்தானே ஆக வேண்டும்" என்று கூறினுர்.

அவள் "ஐயா, அவர்கள் குற்ற மற்றவர்கள். அவர்கள் அவ்விதம் செய்தது என் தூண்டுதலினுல்தான். ஆகையால் குற்றவாளி நான்தான். ஆகையால் உண்மைக் குற்றவாளிகள் இருக்கையில் குற்ற மற்றவர்களை தண்டிக்கச் சொல்லுகிறதா உங்கள் நியாயம். ஐயா அபலைதான் என்று அலட்சியம் செய்யாதீர்கள். கடைசி முறையாக கேட்கிறேன். என் கண வரையும் குழந்தைகளையும் காப்பாற் றுங்கள்" என்று கூறி, ஷெரிப்கா னின் பாதங்களில் தலை படும்படி வணங்கினுள். திடுக்கிட்ட ஷெரிப் கான், 'அம்மணி! எழுந்திருங்கள். ஏதோ என்னுல் முடிந்தவரை செய்து பார்க்கிறேன்' என்று கூறி னுர். அவள் சிறிது நம்பிக்கை பெற் றவளாய் அங்கிருந்து வெளியே சென்ருள்.

ஒரு பெரும் புயலடித்து ஓய்ந்தது போல் இருந்தது ஷெரிப்கானிற்கு அவர் மனதில் யோசனை சக்கரம் சுழல ஆரம்பித்தது. "ஆம். அவள் ஒரு சுயநலமற்ற தியாகி. தன் கண வனது உயிருக்காக தான் குற்றவாளி என்று கூறுகிருள். உண்மைக் குற் றவாளி மறைந்துக் கொண்டிருக்கி ருன். அதோ நாளைக்கு ஜோத்சிங் குற்றவாளி என்று கூறப்பட்டு மடியப்போகிருன். இதற்கெல்லாம் காரணம் யார்? நானல்லவா. அப்பொழுது குற்றவாளி நானு! நானு குற்றவாளி? ஹே அல்லா! நீசமான காரியத்தில் இறங்கினபின் என் திடத்தை என்பிடுங்கிக்கொண் டாய். நான் அப்பெண்ணைக் காப் பாற்றுவேனு; என் தம்பியைக் காப் பாற்றுவேனு; என் பெயரைக் காப் பாற்றுவேனு. என் மனம் என் இவ் வாறு சஞ்சலப் படுகிறது'?" என்று பலவாறு யோசித்தவண்ணம் தன் தம்பியைச் சந்திக்க மாடிக்குச் சென்ருர்.

அறைக் கதவு தொட்டவுடன் திறந்து கொண்டது. ஆடி அசைந்து எரிந்துக் கொண்டிருந்த மெழுகு வர்த்தி, இருளை அதிகமாக எடுத்துக் காட்டியது. ஒரே நிசப்தம். சுற்றிலும் பயங்கர அமைதி. மெழுகு வர்த்தியைக் கையில் எடுத்துக் கொண்டு அடிமேல் அடிவைத்து அங்கிருந்த கட்டிலின் அருகில் சென்ருர்.

அங்கு கண்ட காட்சி!

கட்டிலின்மேல் அவருடைய அரு மைத் தம்பி ரஷீதும், அவன் காதலி யும் ஒருவரை யொருவர் அணைத்த வாறு படுத்திருந்தனர். 'ரஷீத்! ரஷீத்!' என்று கூப்பிட்டார். அவன் அசைந்ததாகவே தெரியவில்லை. அவருக்கு பகீரென்றது. பாய்ந்து சென்று ரஷீதின் உடலை உலுக்கி னுர். அது ஜில்லிட்டிருந்தது. ஆம்: இருவருடைய உயிரின் துடிப்பு ஓய்ந்துவிட்டது. அப்பொழுது தலை யணையில் குண்டூசியினுல் குத்தப்பட் டிருந்த ஒரு கடிதம் கண்டார். கொந் தளிக்கும் மனத்துடனும் நடுங்கும் கைகளுடனும் பிரித்துப் படித்துப் பார்த்தார்.

"நான், பிரபல நீதிபதி ஷெரிப் கானின் தம்பி ரஷீத்கான், ஆண்ட வன்பேரில் சத்தியம் செய்து எழு துவதாவது: "உண்மைக் குற்றவாளி கள்" என்று ஆரம்பித்து எல்லாம் விவரமாக எழுதப்பட்டு, கடைசியில் "இக்கடிதத்தைக் கொண்டு அவர் கள் மூவரையும் விடுவிக்கவேண்டும். நாங்கள் இருவரும் இதற்கு உடன் பட்டிருக்கிருேம். மேஜையின் மேல் இருக்கும் விஷம் அதற்கு சாட்சி.

எங்கள் இருவரையும் ஒரே இடத்தில் புதைக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.''

இப்படிக்கு தங்கள் ஊழியன்,

**முகம்மது ரஷீத்கான்.**

அவர் மனதில் ஒரு பெரும் புயல் வீச ஆரம்பித்தது. 'இக்கடிதத்தைக் கொண்டுபோய்க் காண்பித்து அவர்களைக் காப்பாற்றிவிடு' என்று உபதேசித்தது ஒரு மனம்.

'வேண்டாம், வேண்டாம்; அதைக் காண்பிக்காதே. அதைக் காண்பித்தாயானால் உண்மை வெளியாகிவிடும். ஜோத்சிங் பிழைத்துவிடுவான். ஆனால் இவ்வளவு நாட்களாக நீ எடுத்துக்கொண்ட பிரயாசைகளெல்லாம் வீணாகிவிடுமே. உன் கௌரவத்தைக் காப்பாற்ற நீஎடுத்த முயற்சிகளெல்லாம் வியர்த்தமாகிவிடுமே. கடிதம் நாளைக்கு வெளியானால், குற்றவாளி யார் என்று தெரிந்துவிடும். பிறகு 'பிரபல நீதிபதி ஷெரிப்கானின் தம்பி ரஷீத் என்பவன், இஸ்மெயில்கானைக் கொன்று குற்றத்தை ஒப்புக்கொண்டு, தானும் தன் காதலியுமாக விஷம் உண்டு தற்கொலை புரிந்து கொண்டார்கள்' என்ற செய்திகள் பறக்கும். சின்னஞ்சிறிய 'வாண்டு'கள் முதல் பலர் அன்று தான் பார்த்து பேசியவர் போல், 'பிரபல நீதிபதி ஷெரிப்கானின் தம்பி' என்று கூவுவார்கள். பிறகு வெளியே தலைகாட்ட முடியாது. இத்தனை காலமாக களங்கமற்று இருந்த உன் பெயரில் களங்கம் ஏற்படுத்திக் கொள்ளப் போகிறாயா? உன் கௌரவத்தைக் காப்பாற்று' என்று போதித்தது மற்றொரு மனம்.

'வேண்டாம், மாட்டேன். என் கௌரவத்திற்கு ஹானி விளைவித்துக் கொள்ள மாட்டேன். பிறகு அனர்த்தம், அவமதிப்பு' என்ற பதட்ட வார்த்தைகள் அவரை அறியாமலே வெளிவந்தன. நடுங்கும் கைகளுடன் அதை மெழுகு வர்த்தியில் காண்பித்தார். வரிவரியாக பொசிங்கி அழிந்துக் கொண்டே வந்தது கடிதம். கடைசியில் விளக்கும் 'நான் போகிறேன்' என்று கூறுவது போல் அணைந்தது.

தட தடவென்று கீழே இறங்கி தன் அறைக்குள் சென்று சாய்வு நாற்காலியில் அமர்ந்தார். எதிரே தோன்றியது ஒரு காட்சி. பிரபல நீதிபதி நாற்காலியிலிருந்து எழுந்து குற்றவாளிகளுக்கு மரண தண்டனை என்று கரகோஷங்களுக் கிடையே வாசித்து முடிக்கிறார். கதறும் குற்றவாளிகளை சேவகர்கள் இழுத்துச் செல்கிறார்கள்.

திடுக்கிட்ட ஷெரிப்கான் எழுந்து ஜன்னலிடம்சென்று, கதவைத்திறந்தார். குளிர்ந்த காற்று அவர் முகத்தில் பட்டது. இலைகள் எல்லாம் உதிர்ந்து மொட்டையாக நின்ற மரங்கள் நட்சத்திர வெளிச்சத்தில் நிழலுருவங்கள் போல் காட்சி யளித்தன. அப்பொழுது ஏக்கம் நிறைந்த இரு விழிகள், 'நீங்கள் செய்தது நியாயமா' என்று கேட்பது போல் வானவெளியில் அவரை எதிரிட்டது. ஸ்தம்பித்துப்போய்அப்படியே அசையாது நின்று கொண்டிருந்தார் ஷெரிப்கான்.

ஆம். அவர் செய்தது நியாயமா?

O O O O O O O O O O

**18-2-22** சனிக்கிழமை. உண்ணாவிரதத்துக்குப் பின் காந்தியடிகளுடைய விஷயமாக யாதொரு சேதியும் வரவில்லை. சிறையிலிருந்து விடுதலை பெற்றதும் தோழர்கள் இல்லாமல் தனிமையாக வேலை செய்யவேண்டி யிருக்குமே என்ற பயத்துடன், இப்போது தோல்வியாலும் வேலை யின்மையாலும் மனச்சோர்வும் சேர்ந்துகொள்ளும்போலிருக்கிறது. நம்மைச்சூழ்ந்து நிற்கும் இருளை ஓட்டக்கூடிய ஒளி எதுவும் தோன்றுவதாக இல்லை. ஒத்துழையாமைக் காரர்கள் செய்த இவ்வளவு தியாகங்களின் பலனாக ஏதோ ஒன்றிரண்டு சீர்திருத்தங்கள் மட்டுமேதான் பெறப்போகிறோமா? இந்தச் சீர்திருத்தங்களைப் பெற இத்துணைத் தியாகங்கள் தேவையில்லை. சட்ட வரம்புக்குட்பட்ட பழைய முறையில் ஒழுங்காக இடை விடாமல் உழைத்தால் போதும். இவைகளை எளிதில் பெற்றுவிடலாம். 'பெரும் அரசியல் பலன்கள் பெறாவிட்டாலும் நாம் ஆத்ம சுத்தமும் ஆற்றலும் பெற்றுவிட்டோம் அல்லவா? என்று கேட்கக் கூடும். உண்மைதான், சந்தேகமில்லை. ஆயினும் நம்முடைய மனத்தை இதைக் கூறிச் சமாதானப்படுத்த முடியாது. அத்துடன் இதற்காக ஏற்பட்ட தியாகங்கள் மிகவும் அதிகமானவை என்றே கூறவேண்டும். இவ்வளவு பெரிய இயக்கம் நடத்திவிட்டு இறுதியில் ஏதோ சில சீர்த்திருத்தங்கள் மட்டுமே பெறுவது என்பதை என் மனமானது ஏற்றுக் கொள்ள மாட்டேன் என்கிறது. அதைச் சமாதானப்படுத்த அதிக நாள் செல்லும் போல் தோன்றுகிறது. ஆயினும் நான் யாரையும் குற்றம் சொல்லவில்லை. ஒரே மூச்சில் வெற்றி காண்பதற்கு வேண்டிய ஆற்றல் தேசத்தில் காணப்படவில்லை. அவ்வளவு தூரம் ஜனங்கள் பொருள் வறுமையால் வாடி வதங்கி விட்டார்கள். அதனால் பல முறை போர் நடத்திய பின்னர்தான் வெற்றி காண முடியும் என்று எண்ணுகிறேன்.

—ராஜாஜி.

# இனி நான் உய்வதா?

உமா ஸ்ரீநிவாஸன்

அருமை நண்பனே!

உள்ளம் நினைக்கிறது, ஒருவேளை நான் இப்படி நடந்து கொண்டிருக்கக் கூடுமோ என்று. ஆனல்...!

உண்மையாகச் சொல்கிறேன்: இதயம் என்னை என்னவோ செய்கிறது. உள்ளம் கொந்தளித்து உடலை வாட்டுகிறது மனவேதனை என்னை அப்படியே மங்கி மடியச் செய்துவிடும் என்று தோன்றுகிறது!

நான் இந்த உலகிலே பிறந்திருக்கக் கூடாது. அதுவும் இந்த இப்போதிருக்கும் சந்தர்ப்ப சூழ்நிலைகளில் வளர்ந்து வாழக்கூடாது என்று மனம் கருதுகிறது. பணக்காரனுகவும் பிறக்காமல், ஏழையாகவும் இருக்காமல் மத்திய நிலையிலே வாழும்வகையில் நான் இருப்பதால் ஏற்படும், ஏற்பட்டுவிட்ட அசம்பாவித உணர்ச்சிகள்.........!

நண்பனே! உன்னிடம் இதைப் பற்றி நான் சொன்னதே இல்லை; சொல்ல வேண்டிய முக்யத்வமும் கொடுக்கவில்லை அதற்கு நான்! ஆனல் என்னத்தைச் சொல்ல, அதனல் ஏற்பட்டுவிட்ட மனவேறுபாடுகளை......! என் அருமைப் பெற்றோர்கள்—என்னை நன்ருக அறிந்து கொள்ளவேண்டிய அவர்களே......! ஆகவேதான் உள்ளம் நினைக்கிறது, ஒருவேளை நான் அப்படியும் நடந்துகொண்டிருக்கக் கூடுமோ என்று. ஆனல்......?

* * *

சென்ற முறை நான் உன்னைத் திருச்சியிலே சந்தித்தேனே, அப்போதே உன்னிடம் மனம் விட்டுச் சில விஷயங்கள் சொல்லியிருக்க வேண்டும். அப்படிச் சொல்லியிருந்தால்— ஒரு வேளை......என் நிலை இவ்வளவு அவகேடாக ஆகியிருக்காதோ என்னவோ......?

படித்த இடத்தை விட்டு வேற்றிடத்திலே போய், என் பரீட்சை எழுதினேன் என்று இப்போது பச்சாத்தாபப் படுகிறேன்—அப்படித்தான் வெற்றி பெற முடிந்ததா...? வேற்றிடத்திலே போய் மாற்ருர் ஒருவரை உற்றவர் என்று எண்ணி நடந்துகொண்டதன் விளைவு......?

மிகப் பெரிய ஹோதாவிலே பணக்காரர்கள் என்ற முறையில் வாழ்ந்த அவர்களோடு ஒப்ப நானும் என்னை அனுசரித்துக் கொண்டேன், அதன் பயன்? பிறருக்காக நான் என் என்னை மாற்றிக்கொண்டேன். ......ஒரு வேளை......அதுதான் உள்ளம் நினைக்கிறது, நான் அவகேடாக நடந்து கொண்டிருக்கக் கூடுமோ என்று......

* * *

பெண்களோடு அதிகமாக நான் இதுவரை பழகியதேயில்லை என்று உனக்குத் தெரியும். கலாசாலையிலே படித்த நாட்களிலே கூட மற்ற மாணவ நண்பர்களின் குதூகல கோலாகலங்களிலே ஈடுபட்டுத் தெருவிலே எறிட்டுப் பார்த்து நின்றதும் இல்லை நான்......உனக்குத் தெரியும். சில சமயம் மனத்தை மகிழ்வித்துக்கொள்ள, கண்களை அலையவிட்டதும் உண்டு என்பதை நான் உன்னிடம் மறைக்கவேண்டியதில்லை; ஏன் எவரிடந்தான் மறைக்க வேண்டும்? எது நான் செய்ததுண்டோ, செய்கிறேனே, அதை, சொல்வதற்கு மட்டும் அஞ்சுவானேன்? ஆனல் இதை—இந்தக் கொடும் தவறை நான் எற்றுக் கொள்ளத்தான் வேண்டும் என்று என் உற்ற பெற்றவரே எண்ணும் போது......அப்பப்பா! நண்பனே! இந்த இழைக்காத தவறை—இவர்களுடைய இதய உணர்ச்சிகளை அடியோடு குமைந்துவிடச் செய்யவாவது—'ஆம்' என்று—ஒத்துக் கொண்டு விடலாமோ என்று தோன்றுகிறது!......

......ஆனல் நான் அப்படி நடந்து கொண்டதுண்டோ? மனம், கனவிலும் அவ்வாறு நடந்து கொள்ள என்னைத் தூண்டியதில்லையே!

ஒருவேளை, பகுத்தறிவில்லாத ஒரு அல்ப மிருகம் போல்......சே! ......நினைக்கும் போதே மனம் அசூசிப்படுகிறது!

* * *

அருமை நண்பனே! உனக்குச் சொல்கிறேன்: இந்த ஊளுத்துப் போன சமூகத்தை நம்பவே நம்பாதே! இந்த சமூகத்திற்கு நல்ல பலமாக, தாங்குதலாக இருக்க வேண்டிய, இருக்கிற பெரிய மனிதர்கள்—வயதானவர்களெல்லாம், மிகவும் குறுகிய மனப்பான்மை உள்ளவர்கள்! அத்தனை பேரும், குறைந்தது முக்கால்வாசிப் பேராவது, வாய்ச்சொல் வீரர்கள். பலருக்கு மத்தியிலே சொல்லும் தங்கள் கருத்துக்களை, உற்ற சமயங்களிலே காற்றிலே பறக்க விட்டுவிட்டு, வீண் சந்தேகப் பேய்களுக்கு ஆளாகி, ஆண்மை இழக்கக் கூடியவர்கள்! சமூக சமதர்ம உணர்ச்சிகளையும், உணர்ச்சிக்கு உட்பட்ட உத்தம வாலிபர்களையும் அடியோடு அழித்து விடக்கூடிய ஆற்றல் படைத்தவர்கள் இவர்கள்! இந்தவிதம் நான் சொல்ல, பெரியவர்களை யெல்லாம் அவமதித்துப் பேச, நேர்ந்துவிட்டதற்காக, ஆச்சரியப்படாதே! ஆச்சரியப்பட வேண்டிய நானே தான் அவதிப் படுகிறேனே!

இதற்கெல்லாம் காரணம் சமூகத்தின் கண்களிலே உத்தம ஸ்தானத்தை வகிக்கும் அந்த—ஒப்பற்ற என் பிதாவின்—நண்பர்தான்! ஆனல் அவரைச் சொல்லி என்ன பயன்! அவரை அப்படி எண்ணச் செய்யும் இந்த சமூகம்......சே!... இந்த சமூகத்தின் முன்னேற்றத்திற்காக நம்போன்ற இளைஞர்கள் தங்கள் மானத்தைக் காணிக்கை செலுத்தி இழிவுபெற வேண்டுமோ? பாரதியின் சகாப்தத்திலே—அவன் விழைந்த சமுதாயத்திலே—வாழும் அறிஞர்கள், அறிந்துணரும் ஆற்றல் வாய்ந்தவர்கள்—அவர்களது மனப்பான்மை, இவ்வளவு மட்டமானதாக இருப்பதாயின்—அந்த ஒப்பற்ற கவிஞன் செய்யமுடியாத சமூகப் புரட்சியை நாமா செய்து விடப் போகிறோம்? அந்த அமர கவிஞனின் கவிதைகளிலே தனிச்சுவை கண்டு இன்பம் நுகரும் 'அந்த நண்ப'ரே என்னை அப்படி நினைக்கும்போது........ இருக்கால். ....... ஆற்றவொண்ணுத அச்செய்கையைநான் ஆற்றியுமிருப்பேனே?

* * *

நான் சென்று தங்கியிருந்த என் தந்தையின் நண்பர் வீட்டில், அவர், அவர் மனைவி, ஒரு சகோதரி, குழந்தைகள்—இவர்கள் தான். குழந்தைகள் என்னை விட மிகச் சிறிய

வர்கள்—என் வயதிலே பாதிக்குக் கீழே! பெரியவர்களில் இளைய ளான அந்த சகோதரிகூட என்னை விடப் பத்திரண்டு ஆண்டுகள் மூத்தவள்!

அவர் என் தந்தையின் நண்பர்—என்னையும் உன்னையும் பிணைக்கும் நட்புக்கூட அவ்வளவு முதிர்ந்ததில்லை—அப்போக் கொத்த நெருங்கிய நண்பர்கள் அவர்கள். ஆகவே அவர் என் தந்தைக்கு ஒப்பு; தந்தை தான் என்று பணிந்து நடந்து கொள்வேன், அவரிடம்!

அவர் மனைவி—அவள் என் தாய்! இன்றைக்கும் அவள் அன்பு—பெற்ற தாயை ஒக்கும் அவள் பாசத்தை நினைக்கும் போதே—கண்களில் நீர் துளிர்க்கச் செய்கிறது! என்றென்றும் என் இதயத்திலே தாய், 'அவள்'!

அந்த சகோதரி—என்னுடைய சகோதரி யாகத்தான் மதித்திருந்தேன் நான்! அதற்கு முன் நான் பழகாத ஒரு அங்கத்தினள் அவள் அந்தக் குடும்பத்திலே. ஆகவே அதிகம் நெருங்கிப் பழகாமலேயே இருந்தேன், துவக்கத்தில்.

பெரிய மனிதர், அவர். அவர்கள் வீட்டிலே போய் இருந்து கொண்டு காலங் கழிக்க வேண்டி—நான் என் மனம் மீறித்தான், என்னை அவர்கள் பெரிய ஹோதாவுக்குப் பழக்கப் படுத்திக் கொண்டேன். பெற்ற தந்தையின் உற்ற நண்பரைக் கீழ்ப்படியாத கெட்ட பெயர் வேண்டாமென்று, பழக்கமில்லாத அந்த சகோதரியோடு பழகினேன், என் கூடப்பிறந்த சகோதரியோடு பழகுவது போல. அந்தக் கெட்ட பெயருக்கு அஞ்சியதால் தானோ என்னமோ இன்று, இந்தக் கெட்ட பெயர்!

உற்ற அந்த நண்பரின் நல்லுணர்ச்சிக்காக என் சங்கோசத்தைத் தொலைத்து, 'பெண்கள் மத்தியில் அகப்பட்ட ஒரு ஆடவனின் நிலையில்' நான் தவித்தது என்னை எதற்கு ஆளாக்கிவிட்டது......என் பெற்ற தாய் தந்தையரின் அவமதிப்புக்கும், அவர்கள் பார்வையில் ஒழுங்கீனன், உற்ற நண்பரின் 'உண்ட வீட்டுக் கின்னல் விளைத்த'வன் என்ற நிலைக்கும் தவிர?

* * *

உண்மையாகச் சொல்கிறேன், நண்பனே! உன்னிடம் சொன்னால் உள்ளத்துச் சுமை ஓரளவு குறையும் என்ற ஒரே காரணந்தான்—வேண்டும் என்று நான் நினைத்திருந்தால், சென்ற ஆண்டு வேலையில் இருந்தபோது, ஒன்றல்ல, இரண்டல்ல—உள்ளம் ஓயும் வரை, உடலம் வாடும் வரை—பெண்மை நலம் பெற்றிருப்பேன்! மற்றவன் சுவைத்த மடியும் மலர்களை இல்லை; அன்றலர்ந்த செந்தாமரைகளைப் பெற்றிருப்பேன்!............ஆத்திரம் என்னை இவ்வாறு அப்பட்டமாக எழுதச் சொல்கிறது அன்பனே, ஆங்காரமில்லை!

உனக்குத்தெரியும் பெண்மைக்கு நான் கொடுத்திருக்கும் மதிப்பு எவ்வளவென்று!

கேவலம், மிருக இச்சையைப் பூர்த்தி செய்யப் படைக்கப்பட்ட யந்திரங்கள் இல்லை அவர்கள்! மனிதனைப் போலவே இதயமும் எண்ணமும் படைத்த உணர்ச்சிச் சுரங்கங்கள் அவர்கள். கண் முன்னே நிற்கும் போது கண்ட விதம் பேசி விடும் கயவருக்கு, பிறர் காணாப் பொழுதினிலே, அவர் காம வெறிக்கு, ஏவல் செய்து பணிய, பிரமன் படைக்கவில்லை அவர்களை!

இப்படி எண்ணி எந்திழையரைப் போற்றும் என்னை அவ்வாறு ஒருவர் நினைத்து விடுவதென்றால்.........!

உத்தம நண்பனே! உள்ளத்து மூலையெல்லாம் உசாவிய பிறகு—கள்ளத்தனமான கருத்தொன்றும் இருந்ததில்லையென—கடவுளென்று மதித்தற்குரிய பெற்றவரிடம் சொல்லி விட்டேன்; இதயம் விம்ம, கண்களில் நீர்மல்க, கதறி விட்டேன்: "கண்ணெடுத்தும் அவளைக் காமமெழப் பார்த்ததில்லை, திண்ணம் உளத்தாலும் தீண்டவில்லை" யென்று. ஆனால்.........அவர்கள் ஏற்படுத்திக் கொண்டு விட்ட அபிப்பிராயம்.........அன்றிலிருந்து இன்றுவரை ஒன்றுதான்—'பாதகன் நான், பாவியவள் மோகத்தில் மதி யிழந்தேன்'—என்பதுதான்!

* * * *

நான் கூட யோசனை செய்து பார்த்தேன், என்னைப் போல ஒரு இளம் பிள்ளை, இதயம் அறியாமல் கூட, வயதிலும் உருவத்திலும் மூப்படைந்து விட்ட ஒருவளைப் பெண்டாள நினைக்கக் கூடுமோ—என்று!

ஒன்றும் புலப்படவே இல்லை.

என்னையே உதாரணமாக எடுத்துக்கொண்டு, அமைதியாக, கொந்தளித்துக் கொதிக்கும் துயரையெல்லாம் அடக்கிக் கொண்டு, சிந்தனை செய்து பார்த்தேன்.

முப்பத்தைந்து வயதான அந்த ஸ்திரீயை, குழந்தைகள் பார்த்தாலும் அருவருக்கக்கூடிய அந்த முகத்தை, என்னோடு சம்பந்தப் படுத்தவே இதயம் ஒப்பவில்லை!

அப்படி இருக்கும் போது .......

அந்த ஒப்பற்ற நண்பரே என் தந்தையிடம் சொன்னாராம், 'உன் மகன், அவகேடாக, அதுவும் எங்கள் வீட்டிலே நடந்து கொண்டான்' என்று!

நண்பனே!

இந்த சமூகம்..............இவர் போன்ற சமுதாய சிலர்களுக்கு மத்தியிலே தத்தளிக்கும் போது......இவர்கள் பக்கம்தானே சேரும்! ஆகவே இந்த சமூகத்திலே நான் உய்வது முடியும் என்று நீ நினைக்கிறாயா..........?

என், எப்போது நான் தவறிழைக்க முற்பட்டதாக அவருக்குத் தோன்றிற்றோ, அப்போதே என்னைக் கண்டித்துத் தன் வீட்டை விட்டு வெளியே அனுப்பி யிருக்க, அவருக்கு—பெற்ற மகன் போல் நடந்துகொண்ட என்னிடம்—உரிமை கிடையாதா? அவர் குடும்பத்திலே மிகவும் நெருங்கி என்னைப் பழகச் செய்து, மிகவும் அன்பாக என்னை நடத்திய தெல்லாம், என்னை சமூகத்தின் கண்களிலே கசடனாக, நம்பிக்கைத் துரோகியாகக் காட்டவா?

* * *

நண்பனே! மனம் குழம்புகிறது...........மிகை யில்லை, மெய்யாகச் சொல்கிறேன்.........உணர்ச்சிகள் கொந்தளித்துக் கொதித்து என்னைக் கொல்கின்றன..........நான் இனி உய்வதா?........

உன் 'ப்ரபு'

# சிலையின் குறை

என். பி. வி. ரரஜகோபால்

அந்த சப்தத்தைக் கேட்டதும் எனக்கு 'திக்' என்றது. அப்படியே நின்று விட்டேன். கைகால்கள் சலனமற்று விட்டன. மெதுவாக சிரமப்பட்டு தைரியத்தை வரவழைத்துக் கொண்டேன். பேச மறுத்துவிட்ட நாக்கை, கஷ்டப்பட்டுப் புரட்டி, "யாரது" என்று இரைந்து கேட்கத்தான் முயற்சித்தேன். ஆனால் நான் கேட்டது எனக்கே புரியாத அளவில் உளறலாக வெளிப்பட்டது. என் கைகால்கள் என்னை யறியாமலே நடுங்கிக் கொண்டிருந்தன. திரும்பவும் என் காதுகளில், விசித்து அழும் அதே சப்தம் கேட்டது. கொஞ்சம் நிதானித்தேன். ஆம், அது பெண்மையின் மென்மைகொண்ட குரல்தான். பெண்தானே! என்ற அலட்சியத்துடன், பயம் கொஞ்சம் நகர்ந்தது. முழுதும் தீரவில்லை.

"யாரம்மா? என் அழுகிறாய்?" என்றேன் சற்று அழுத்தமாக.

"நான்தான் ரஞ்சனி; அழுகிறேன்" என்றது அப் பெண்குரல்.

"ரஞ்சனியா! யார்? நீ எங்கே இருக்கிறாய்?"

"இதோ, உன் எதிரில்தான் இருக்கிறேன், சிலையாக."

இதைக் கேட்டதும் எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. பாழடைந்த கோவிலில்—அதுவும் சிலை பேசுவதென்றால்! என் வாழ்க்கையின் இறுதி கிட்டிவிட்டதென்றே முடிவு செய்துவிட்டேன். பயம் ஒரு பக்கம். சிலை பேசுகிறது என்ற ஆச்சரியம் ஒரு பக்கம். சிலையை பயத்துடன் கவனித்தேன். சிலை என்றால் இப்படிப்பட்ட சிலையை நான் பார்த்ததே இல்லையே! இது சிலைதானா? எவ்வளவோ சிலைகளைப் பார்த்திருக்கிறோம். அவைகளெல்லாம் இப்படியா இருந்தன? இப்படி ஒரு சிலையும் இருக்க முடியாது. சிலைகள் சாதாரணமாக மூக்கும் முழியும், அளவுக்கு மீறிய மார்பகங்களும், ஒடிந்து விட்டது போன்ற இடையும், தலை நிறைய நகைகளைப் போன்ற மேடுபள்ளங்களும்... ஆனால் இது! அதுதானே ஆச்சரியமாக இருக்கிறது. இதைச் சிலை - கல் என்ற முடிவுக்கு வர, என்னால் இயலவில்லையே. கண்ணைப் பறிக்கும் அழகு வாய்ந்த இதை—இல்லை. இவளை, பார்த்துக்கொண்டே இருந்தாலும் போதும். பசி, தாகம், நோய் எல்லாம் மறைந்துவிடும். மணிக்கணக்கில்—ஏன், நாள்-வருஷ-யுகக்கணக்கில்கூட, இதன் எழிலைப் பருகிக் கொண்டே இருந்தாலும், மனம் திருப்தி யடையாது. வெட்கத்தால் தலை குனிந்து, ஜாடையாக எதிரில் இருப்பவரைப் பார்க்கும் அந்த வேல் விழிகள். அப்பா! அந்தக் கண்களில்தான் எத்தனை மருட்சி! தலை குனிந்து நிற்கும் அந்த பாவம். ஆஹா! பார்ப்பவரையும் தலை குனியச் செய்கிறதே! இதழ்க் கடையில் தான் எத்தகைய மோகனப் புன்னகை! இதை—இவளை பார்க்கப் பார்க்க மனதில் ஏதோ ஒரு எழுச்சி உண்டாகிறது. என்ன அற்புதம்! சாதாரண சிலைகளைப் போலன்றி, முழு நிர்வாணமாக—மாசு மறுவின்றி, முழு அழகையும் அள்ளி வீசிக்கொண்டு நிற்கிறாளே! பிரமிக்கத்தக்க மார்பு; துவண்ட கொடிகளைப் போன்ற கைகள்; சிறுத்த இடை; குழிந்து ஆழமான தொப்புள்; பருத்துத் திரண்ட தொடைகளின் ஒய்யார அமைப்பு; அப்பப்ப! இன்னும் எவ்வளவோ வர்ணிக்க முடியாத அவயவங்கள். சிற்பியால்—மனிதனின் கைத்திறத்தால் உண்டான சிலையல்ல இது. நிஜமாக சத்யமாகக்கூட சொல்லுவேன்.

இந்த அழகியை, எந்தப் பாதகனோ கல்லாய்ச் சபித்துவிட்டான். ஆம், இதுதான் உண்மை. அந்தப் பாபியின் நயவஞ்சகத்துக்கு, இவள் உட்பட மறுத்துவிட்டாள். அதனால் தான் இவளை நிர்வாணமாக்கி கல்லாக சமைத்துவிட்டான் போலும்.

மறுபடியும் அந்த விசித்து அழும் ஓசை. என் நினைவு திரும்பிற்று. எங்கோ பதுங்கிக் கிடந்த பயம். என்னைத் திரும்ப அணைத்துக் கொண்டது. ஏதாவது 'பேய், பிசாசு' என்று எண்ணத் தொடங்கியது உள்ளம். எப்படியாவது வெளியில் போய்விட வேண்டித் தவித்தேன்.

"பயப்பட வேண்டாம். நான் பேயோ, பிசாசோ அல்ல. ஒரு சாதாரணப் பெண் ஜன்மம் தான். நான் செய்த பாபமோ என்னவோ இப்படிப்பட்ட கொடுமையை அனுபவிக்கிறேன். நீ ஒருவன்தான் என் அழுகையை—துயரைக் கண்டு, இரக்கம் காட்டுகிறாய். எத்தனையோ பேர்கள்—ஆண்கள் இங்கு வருகிறார்கள். அவர்களெல்லாம் உன்னைப் போல எனக்காகப் பச்சாதாபப் பட்டதில்லை. அவர்களெல்லாம் கொடியவர்கள்; மிருகங்கள். என்னைப் பார்த்து சிரிப்பார்கள். படமெடுப்பார்கள்—போய்விடுவார்கள். என்னை இந்த நிலையில் படமெடுக்க, அவர்களுக்கு—ஆண்களுக்கு கொஞ்சங்கூட வெட்கங் கிடையாது. அவர்களை எல்லாம் மனித ஜன்மங்களாக, கடவுள் என் படைத்தாரோ தெரியவில்லை. இன்னும் எத்தனை யுகங்கள், இப்படி நான் அவதிப்பட வேண்டுமோ" என்று அழ ஆரம்பித்துவிட்டது அந்தக் குரல்.

எனக்கு அதிக வருத்தமாக இருந்தது. ஆனாலும், அவளுடைய கதையை — அவஸ்தை யடைந்த

விதத்தைக் கேட்க, என் உள்ளம் அவாவியது.

அந்தக்குரல் கொஞ்சம் கனைத்து அழுகையை அடக்கிக் கொண்டு, மேலும் சொல்லத் தொடங்கிற்று.

"என் கதை. ஆம், அது கதையாக இருந்திருந்தால் எவ்வளவோ நன்ருக இருந்திருக்கும். ஆனல், என்னுடையது கதையல்ல; நிஜமானது—நடந்தது. நீ எனக்காக இரக்கம் காட்டுகிருய். உன்னிடம் என்னைப் பற்றி சொல்ல எனக்கு எவ்வித தடையும் இல்லை. ஆனல்... நீ...தயவு செய்து உன் எதிரே இருக்கிறதே என் உருவம்—சிலை அதன் உடம்பை: உன் மேல் துண்டால் மறைத்து போர்த்திவிடு. எனக்கு நிம்மதி ஏற்படும்."

என் மேல் துண்டை எடுத்து அந்தச் சிலையின் உடலை மூடினேன்.

"அப்ப! எனக்கு இப்போது தான், உன்னிடம் பேச தெம்பாக இருக்கிறது. கேள் இனி என் கதையை.

* * *

"இருபது வருஷங்களுக்கு முன்னல் நடந்த சம்பவம் அது. நான் ரொம்ப ஏழைக் குடும்பத்தில் பிறந்தவள்தான். ஏழை என்ருலும் ரொம்ப அழகி என்று எல்லோரும் சொல்லுவார்கள். அப்போதெல்லாம் என் அழகு எனக்கே வியப்பளிக்கும். பதினைந்து வயதில் கல்யாணம் செய்தார்கள். எனக்குப் புருஷராக வந்தவர், ஒரு சிற்பி. சிற்பி என்ருல் சாமானிய சிற்பி யல்ல. ரொம்ப பெயர்பெற்ற கை தேர்ந்த சிற்பி. அவர் செய்யும் சிலைகளெல்லாம் பேசும் என்பார்கள். அவ்வளவு திறமைசாலி. அவர் திறமையைப் பற்றி பிறர் பேசும்போது, என் உள்ளம் இன்புறும். கல்யாணமான புதிது. அடிக்கடி அவரைப் பார்க்கவேண்டும்போல் இருக்கும் எனக்கு. ஆனல், அவரைப் பார்ப்பதுதான் கடினம். வீட்டில் தங்கவே மாட்டார்.

"ஒரு இரவு என்னையும் அவரையும், ஒரு அறையில் விட்டு பூட்டி விட்டார்கள். எவ்வளவோ ஆனந்தமாக, அந்த இரவு கழியுமென்று பெருமையோடிருந்தேன். அறைக்குள் சென்றதும், அவரை மெதுவாகப் பார்த்தேன். எனக்கு ஆச்சர்யமாக இருந்தது. எனக்கிருந்த ஒரு ஆர்வம் அவரிடம் காணப்படவில்லை. அவர் ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் இருந்தார். நான் மெதுவாகக் கனைத்துக் கொண்டேன். அது அவர் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. பிறகு பாலை அவரிடம் நீட்டினேன் தயக்கத்துடன். அவர் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. எனக்கு என்னவோ செய்தது. நான் ஏதோ குற்றவாளியைப் போல, "பால் ஆறிப் போகிறது" என்று அசட்டுத் துணிவுடன் கூறி விட்டேன். கனக் கண்டவர்போல் திடுக்கிட்டு, "ஓ, நீ வந்துவிட்டாயா? ஏதோ யோசனையில் இருந்துவிட்டேன்" என்று பாலை வாங்கி அருந்தி, எனக்கும் கொடுத்தார். என் பயம் தீர்ந்துவிட்டது. பிறகு என்னென்னவோ பேசினேம். எல்லாம் சிலை—சிலையின் அழகு, இதைப் போன்ற விஷயங்களாகத் தானிருந்தன.

பாதிராத்திரியாகி இருக்கும். என்னவோ நினைத்துக் கொண்டு, என் முழு அழகைப் பார்க்க...... என்னைப் பார்த்துக் கொண்டே இருந்தார். உச்சி முதல் உள்ளங் கால் வரைக்கும், உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தன அவருடைய கண்கள். இப்படி எவ்வளவு நாழிகைகள் சென்றதோ எனக்குத் தெரியாது. கால்கள் வலிக்க ஆரம்பித்தன- தூக்கம் வேறு கண்ணை அழுத்திற்று.

"'கால் வலிக்கிறது' என்றேன் வலி இழந்த தொனியில். திடுக்கிட்டவர்போல "ஓ! நீ சிலை இல்லையா? இதோ இன்னும் கொஞ்சம் நிமிர்ந்து நில். எங்கே கால்களை சேர்த்துவை. இடது கையை இடுப்பில்........" என்று என்னவெல்லாமோ சொல்லிக் கொண்டிருந்தார். நானும் அப்படியே செய்தேன்.

"ரஞ்சனி! இத்தனை நாட்கள் நான் செய்தவைகளெல்லாம் பெண் சிலைகளல்ல. சாஸ்திர—ஏட்டுச் சிலைகள். இனிதான், நிஜமான பெண் அழகை கல்லில் வடிக்கப் போகிறேன். இதைச் செய்து முடித்தால் தான், நான் உண்மை சிற்பி. ஆம்; உன்னைப்பார்த்தபின் தான், சிற்ப சாஸ்திரம் முழுதும் கற்றவனுகிறேன். ரஞ்சனி; என்னை சிற்ப பைத்தியம் என்று எண்ணுகிருயா? எப்படி வேண்டுமானுலும் நினைத்துக் கொள். இனி நான் நிஜ சிற்பி! உனக்கு தெரியுமா ரஞ்சனி; பெண்ணழகை—நிஜப் பெண்ணழகை, சிற்பத்தில் அள்ளிக் கொட்டப் போகிறேன். அடி என் சிற்ப சாஸ்திரமே! என் கலைக்கு உயிர் கொடுத்த என் ரஞ்சனியே! உன்னுல் என் புகழ் வானளாவப் போகிறது. எனக்கு மட்டுமல்ல அந்தப் புகழ் என் ரஞ்சனிக்கும் நிறைய பங்குண்டு!" என்று சொல்லிக் கொண்டே வெளியில் சென்று விட்டார். இதுதான் என் வாழ்கையின் முதல் இரவு.

அன்று வெளியில் சென்றவர் தான். ஆறுமாதங்கள் வரை, நிதம் நிதம் அவரது வருகைக்காக ஏங்கித் தவித்தேன். அவரைப் பார்க்க முடியவில்லை.

ஒருநாள் "ரஞ்சனீ" என்ற குரல் கேட்டுத் திகைத்துப் போனேன். என் உடலும், உள்ளமும் பலஹீனமாக இருந்தன. திரும்பிப் பார்த்தேன். அவர்தான், என் பக்கத்தில் நின்று கொண்டிருந்தார். எனக்கு அழுகை வந்துவிட்டது அவரைப் பார்த்ததும். உடல் இளைத்திருந்தார். அவரைச் சாப்பிட அழைத்தேன்.

"வேண்டாம் ரஞ்சனீ. நீ என்னுேடு கோவிலுக்குவா. உன் பெண்ணழகை—உன்னைத் தான் கல்லில் வடித்து விட்டேன். முகத்தை மட்டும் உன்னை கூட வைத்துப் பார்த்து, முடிவான திருத்தம் செய்யவேண்டும். வா, சீக்கிரம் கிளம்பு" என்ருர். மறுத்துப் பேசினல் கோபம் வந்து விடும் என்ற பயம் எனக்கு. நான் பதில் சொல்லாமல் அவருடன் நடந்தேன்.

"மாலை இருட்டும் நேரம். அந்தக் கோவிலுக்குள் அவரும் நானும் நுழைந்தோம். உள்ளே ஒரு பெரிய அறை மாதிரி இருந்தது. எங்கு பார்த்தாலும் சிறு கருங்கல் சல்லிகள், சிதறியும் தெறித்தும் கிடந்தன. எத்தனையோ சிலைகள் மூலைக்கு ஒன்றாக நின்றிருந்தன. முடிவில் ஒரு சிலையருகில்—உன் எதிரில் இருக்கிறதே இந்த சிலையருகில் தான்—வந்து நின்றோம். எனக்கே பார்க்கக் கூச்சமாக இருந்தது அந்த உருவம். முற்றும் நிர்வாண சிலை. மெதுவாக அதன் முகத்தை எட்டிப் பார்த்தேன். கண்ணாடியில் என் முகத்தைப்பார்ப்பது போன்ற பிரேமை ஏற்பட்டது. அந்த இரவில், நான் நின்ற நிலைதான் இது என்று எனக்குப் புரிந்து விட்டது. அவர் முகத்தைப் பார்த்தேன். என்னையும், என் கல்லுருவையும், மாறி மாறி பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்கு பைத்யம் பிடித்து விட்டதோ என்றுகூட பயந்து விட்டேன். என்னவோ நினைத்துக் கொண்டு,

"எங்கே, இந்த சிலையைப் போல் நில்லு, பார்ப்போம்" என்றார். நானும் அதைப் போல் நின்றேன்.

"உஹூம், அப்படி இல்லை. அந்தச் சிலையைப் போலவே, அழகு மறைக்கப்படாமல்—நிர்வாணமாக" என்றார்.

"எனக்கு ரொம்ப வெட்கமாக இருந்தது. அவருக்கு இது கோவில் என்பதுகூட மறந்துவிட்டதுபோலத் தோன்றியது.

"இது கோவில்; யாராவது வருவார்கள்" என்றேன் பயத்துடன்.

"இது என் சிற்ப அறை; யாரும் வரமாட்டார்கள்; சீக்கிரம்" என்றார். நான் மலைத்துக் கொண்டே அங்குமிங்கும் சுற்றிலும் பார்த்தேன். என் தாமதம் அவருடைய கோபத்தைக் கிளறி விட்டதோ என்னவோ, என் புடவையையும், மற்றவைகளையும் அவரே.........

எனக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. தலை தானாகக் குனிந்து கொண்டது. அவர் உளியும் சுத்தியுமாக அந்தச் சிலையிடம் சென்றார். என் பக்கம்பார்த்து "தலையை நிமிர்" என்று அதட்டினார். நான் தலையை சிரமத்துடன் நிமிர்த்தினேன். மறுபடியும் என் தலை என்னையறியாமலே தாழ்ந்துவிட்டதோ என்னவோ. அவருக்கு கோபம் வந்துவிட்டது. சிவந்த கண்களை உருட்டி விழித்துக்கொண்டு, வேகமாக என்னிடம் வந்தார். "தலையை நிமிரச் சொன்னால், காதில் விழவில்லையா?" என்று கரேமாகக் கத்தி, கையிலிருந்த பெரிய சுத்தியால் என் தலையில் ஓங்கி அடித்து விட்டார். அடுத்த வினாடி என் உடல் கீழே சாய்ந்துவிட்டது.

"நான் இறந்துவிட்டேன். என் உடலை எங்கோ கொண்டுபோய், எரித்துவிட்டார்கள். அவர் அன்றிலிருந்து இங்கு வரவே இல்லை. நான் மட்டும்தான் இந்த என் உருவச் சிலையைச் சுற்றிக்கொண்டே இருக்கிறேன். நண்பா, நான் செத்துவிட்டதற்காக, கொஞ்சங்கூட வருந்தவில்லை. ஆனால்......" அந்தக் குரலில் துன்பம் நிறைந்து விட்டது.

"என் மானத்தைக் காத்த உன்னிடம் சொல்லாமல், பின் யாரிடம் சொல்லப்போகிறேன். பாக்கியையும் சொல்லிவிடுகிறேன். இந்த என் சிலையை, எத்தனையோ பேர்கள் வந்து பார்க்கிறார்கள்; தொடுகிறார்கள். சில வாலிப மிருகங்கள் தனியாக வருகிறார்கள்.........கல் என்றுகூட நினையாமல் என்னை—இல்லை, சிலையை அக்கம் பக்கம் பார்த்து விட்டு.........அய்யோ தாங்க முடியாது. போதும் போதும். ஏழு ஜன்மங்களுக்கும் பெண் ஜன்மம் கூடாது. என்ன கஷ்ட காலம். என்ன பாபம் செய்து விட்டேனோ இவைகளை அனுபவிக்க" என்று அழுதது.

அந்த பரிதாப நிலையைக் கண்டு கேட்டு என்னால் சகிக்க முடியவில்லை. கண்களில் நீர் நிரம்பிவிட்டது.

மறுபடியும் ரஞ்சனியின் குரல் பேசிற்று.

"நீ கண் கலங்கி என்ன பிரயோசனம். நான் செய்த வினை. அதற்கு நீ என்ன செய்வாய். இவ்வளவு தூரம் எனக்காக வருந்துவதற்கு, நீ ஒருவனாவது இருக்கிறாயே. அதுவே எனக்குப் பரம திருப்தி.

"ஒரே ஒரு வேண்டுகோள். அதை மட்டும் நீ நிறைவேற்றிவிட்டால், இந்த என் கஷ்டம் ஒரு வழியாகத் தீர்ந்துவிடும். என் வேண்டுகோளைப் பூர்த்திசெய்வதில்உனக்கு ஒருவித கஷ்டமோ, நஷ்டமோ இல்லை. வெகு எளிதில் செய்து விடலாம். இதோ இதுதான், எனது வேண்டுகோள். இந்தச் சிலைக்குப் பின்னால் போ."

நான் பின்னால் போனேன்.

"சிலையின் முதுகில், உன் இரு கைகளையும் வை."

நான் வைத்தேன்.

"உம். வேகமாக — பலமாகத் தள்ளு. உம், தள்ளு."

நான் தள்ளிவிட்டேன். அது தடாலென்று கீழே விழுந்து பல துண்டுகளாகி விட்டது.

"ஹ ஹ் ஹ ஹ் ஹ். நண்பா நீ செய்த இந்த உபகாரத்தை, இந்த ஜீவன் என்றைக்கும் மறவாது. எத்தனையோ வருஷங்களாக அனுபவித்த கஷ்டங்களை, ஒரு நொடியில் தீர்த்துவிட்டாய். இருபது வருஷங்களுக்குப் பிறகு, உன்னால் இன்று சிரிக்கிறேன். இனி என் அழுகையை யாராலும் கேட்க முடியாது. அந்தக் கயவர்கள்—மிருகங்கள் என்னை வந்து பார்த்து ஏமாந்துபோய் நிற்பார்கள். நான் சிரிப்பேன்: உனக்காக—உன் நன்றிக்காக சிரிப்பேன். ஹஹ்ஹஹ்ஹ!



Edited and Published by K. Srinivas, at Chiranjeevi Concerns. 1/186, Mount Road, Madras, and Printed by D. Rathnavelu, at Sri Bharathi Press. 19, Alathur Subramania Achari Street, Choolai, Madras.



ராவ் பகதூர் ருத்ராக்ஷப் பூனையின் மான நஷ்ட வழக்கு மாஜிஸ்ட்ரேட் தீர்ப்பு கூறும்வரை காத்து நிற்கவில்லை.

ஆசிரியர் நவீனன் கோர்ட்டிலும் தன் மானத்தை வாங்குவதை சகியாமல் வாதியே வழக்கை வாபஸ் பெற்றுவிட்டார்.

**திறமையும் புரட்சியும் கொண்ட ஒரு ஆசிரியரின் வாழ்க்கைச் சித்திரம்**

# மின்மினி

**மேனகா** **காஞ்சனா**
**விஜயகுமார்** **கிருஷ்ணசாமி**

நடிப்பது.

முடிவடையும் தருவாயில் இருக்கிறது.

**ப்ரகதி பாரதி கூட்டுத் தயாரிப்பு**

"மாலை இருட்டும் நேரம். அந்தக் கோவிலுக்குள் அவரும் நானும் நுழைந்தோம். உள்ளே ஒரு பெரிய அறை மாதிரி இருந்தது. எங்கு பார்த்தாலும் சிறு கருங்கல் சல்லிகள், சிதறியும் தெறித்தும் கிடந்தன. எத்தனையோ சிலைகள் மூலைக்கு ஒன்றாக நின்றிருந்தன. முடிவில் ஒரு சிலையருகில்—உன் எதிரில் இருக்கிறதே இந்த சிலையருகில் தான்—வந்து நின்றோம். எனக்கே பார்க்கக் கூச்சமாக இருந்தது அந்த உருவம். முற்றும் நிர்வாண சிலை. மெதுவாக அதன் முகத்தை எட்டிப் பார்த்தேன். கண்ணாடியில் என் முகத்தைப்பார்ப்பது போன்றபிரேமை ஏற்பட்டது. அந்தஇரவில்,நான் நின்ற நிலைதான் இது என்று எனக்குப் புரிந்து விட்டது. அவர் முகத்தைப் பார்த்தேன். என்னையும், என் கல்லுருவையும், மாறி மாறி பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்கு பைத்யம் பிடித்து விட்டதோ என்றுகூட பயந்து விட்டேன். என்னவோ நினைத்துக் கொண்டு,

"எங்கே, இந்த சிலையைப் போல் நில்லு, பார்ப்போம்" என்றார். நானும் அதைப் போல் நின்றேன்.

"உஹூம், அப்படி இல்லை. அந்தச் சிலையைப் போலவே, அழகு மறைக்கப்படாமல்—நிர்வாணமாக" என்றார்.

"எனக்கு ரொம்ப வெட்கமாக இருந்தது. அவருக்கு இது கோவில் என்பதுகூட மறந்துவிட்டதுபோலத் தோன்றியது.

"இது கோவில்; யாராவது வருவார்கள்" என்றேன் பயத்துடன்.

"இது என் சிற்ப அறை; யாரும் வரமாட்டார்கள்; சீக்கிரம்" என்றார். நான் மலைத்துக் கொண்டே அங்குமிங்கும் சுற்றிலும் பார்த்தேன். என் தாமதம் அவருடைய கோபத்தைக் கிளறி விட்டதோ என்னவோ, என் புடவையையும், மற்றவைகளையும் அவரே........ எனக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. தலை தானாகக் குனிந்து கொண்டது. அவர் உளியும் சுத்தியுமாக அந்தச் சிலையிடம் சென்றார். என் பக்கம்பார்த்து "தலையை நிமிர்" என்று அதட்டினார். நான் தலையை சிரமத்துடன் நிமிர்த்தினேன். மறுபடியும் என் தலை என்னையறியாமலே தாழ்ந்துவிட்டதோ என்னவோ. அவருக்கு கோபம் வந்துவிட்டது. சிவந்த கண்களை உருட்டி விழித்துக்கொண்டு, வேகமாக என்னிடம் வந்தார். "தலையை நிமிரச் சொன்னால், காதில் விழவில்லையா?" என்று கடூரமாகக் கத்தி, கையிலிருந்த பெரிய சுத்தியால் என் தலையில் ஓங்கி அடித்துவிட்டார். அடுத்த வினாடி என் உடல் கீழே சாய்ந்துவிட்டது.

"நான் இறந்துவிட்டேன். என் உடலை எங்கோ கொண்டுபோய், எரித்துவிட்டார்கள். அவர் அன்றிலிருந்து இங்கு வரவே இல்லை. நான் மட்டும்தான் இந்த என் உருவச் சிலையைச் சுற்றிக்கொண்டே இருக்கிறேன். நண்பா, நான் செத்துவிட்டதற்காக, கொஞ்சங்கூட வருந்தவில்லை. ஆனால்......" அந்தக் குரலில் துன்பம் நிறைந்துவிட்டது.

"என் மானத்தைக் காத்த உன்னிடம் சொல்லாமல், பின் யாரிடம் சொல்லப்போகிறேன். பாக்கியையும் சொல்லிவிடுகிறேன். இந்த என் சிலையை, எத்தனையோ பேர்கள் வந்து பார்க்கிறார்கள்; தொடுகிறார்கள். சில வாலிப மிருகங்கள் தனியாக வருகிறார்கள்.........கல் என்றுகூட நினையாமல் என்னை—இல்லை, சிலையை அக்கம் பக்கம் பார்த்து விட்டு.........அய்யோ தாங்க முடியாது. போதும் போதும். எழு ஜன்மங்களுக்கும் பெண் ஜன்மம் கூடாது. என்ன கஷ்ட காலம். என்ன பாபம் செய்து விட்டேனோ இவைகளை அனுபவிக்க" என்று அழுதது.

அந்த பரிதாப நிலையைக் கண்டு கேட்டு என்னால் சகிக்க முடியவில்லை. கண்களில் நீர் நிரம்பிவிட்டது.

மறுபடியும் ரஞ்சனியின் குரல் பேசிற்று.

"நீ கண் கலங்கி என்ன பிரயோசனம். நான் செய்த வினை. அதற்கு நீ என்ன செய்வாய். இவ்வளவு தூரம் எனக்காக வருந்துவதற்கு, நீ ஒருவனாவது இருக்கிறாயே. அதுவே எனக்குப் பரம திருப்தி.

"ஒரே ஒரு வேண்டுகோள். அதை மட்டும் நீ நிறைவேற்றிவிட்டால், இந்த என் கஷ்டம் ஒரு வழியாகத் தீர்ந்துவிடும். என் வேண்டுகோளைப் பூர்த்திசெய்வதில்உனக்கு ஒருவித கஷ்டமோ, நஷ்டமோ இல்லை. வெகு எளிதில் செய்து விடலாம். இதோ இதுதான், எனது வேண்டுகோள். இந்த சிலைக்குப் பின்னால் போ."

நான் பின்னால் போனேன்.

"சிலையின் முதுகில், உன் இரு கைகளையும் வை."

நான் வைத்தேன்.

"உம். வேகமாக — பலமாகத் தள்ளு. உம், தள்ளு."

நான் தள்ளிவிட்டேன். அது தடாலென்று கீழே விழுந்து பல துண்டுகளாகி விட்டது.

"ஹஹ்ஹஹ்ஹ. நண்பா நீ செய்த இந்த உபகாரத்தை, இந்த ஜீவன் என்றைக்கும் மறவாது. எத்தனையோ வருஷங்களாக அனுபவித்த கஷ்டங்களை, ஒரு நொடியில் தீர்த்துவிட்டாய். இருபது வருஷங்களுக்குப் பிறகு, உன்னால் இன்று சிரிக்கிறேன். இனி என் அழுகையை யாராலும் கேட்க முடியாது. அந்தக் கயவர்கள்—மிருகங்கள் என்னை வந்து பார்த்து ஏமாந்துபோய் நிற்பார்கள். நான் சிரிப்பேன்: உனக்காக—உன் நன்றிக்காக சிரிப்பேன். ஹஹ்ஹஹ்ஹஹ!



Edited and Published by K. Srinivas, at Chiranjeevi Concerns. 1/186, Mount Road, Madras, and Printed by D. Rathnavelu, at Sri Bharathi Press. 19, Alathur Subramania Achari Street, Choolai, Madras.